குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 ] காளயுக்தி ஆண்டு மார்கழித்திங்கள் 10—1—79 [ இதழ் 2

உலகெலாம் பசியும் பிணியும் நீங்கி - வசியும் வளனும் சுரக்க

அருள்பாலகுரு



அன்னை தானிய லட்சுமியின் திருத்தோற்றம்

உழவர் திருநாளாகிய பொங்கல் திருநாளில்
இவ்விதழில் காட்சி தருகிறது.

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—★—

வாழ்ஜம் மலத்தால்
 வருந்தி மிகஉடைந்த
ஏழையனுக் கையோ
 இரங்குவாய் — கோழையனுய்ப்
போனேன் புலப்பகையால்
 பொன்னடியை நின்னருளால்
தானேதா சொக்கநா தா.

— சொக்கநாத வெண்பா-48

ஆசிரியர் :-

வித்துவான்

**இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

துணையாசிரியர் :-

மகாவித்துவான்

சி. அருணைவடிவேல் முதலியார்

உ

குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 | 10-1-79 | இதழ் 2

## உட்பொருள்





உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 38 | காளயுக்தி - மார்கழி - 10—1—79. | இதழ் 2

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

## "குழந்தைகள் ஆண்டில் சில சிந்தனைகள்..."

**நல்லோர் விருப்பம்:**

குழந்தைகளே வருங்காலக்குடிமக்கள் - அமைச்சர்கள் - அதிபர்கள் எல்லாம். குழந்தைகளின் வாழ்வு பெற்றோர், ஆசிரியர், அரசினர் என்ற முத்திறத்தாரிடம் ஒப்படைக்கப்பெற்றிருக்கிறது. இம்முத்திறத்தாரும் கடமை உணர்ந்து செயற்படுவார்களானுல் நாடும் வீடும் நலமுற்றுத் திகழும். இதுபற்றியே, "சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு" என்ற முத்திரையுடன் 1979 பிறந்திருக்கிறது. இந்தியப் பேரரசும் பல்வேறு கோணங்களில் திட்டமிட்டு. இவ்வாண்டில் குழந்தைகளின் நலம்பேண உறுதிபூண்டுள்ளது. இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. நீலம் சஞ்சீவரெட்டி அவர்கள் புதுடில்லியில் சர்வதேசக் குழந்தைகள் ஆண்டுக் கொண்டாட்டங்களைத் தொடங்கிவைத்து உரையாற்றியுள்ளார்கள்.

"குழந்தைகள்தாம் இந்நாட்டின் மகத்தான சொத்து. அவர்கள் எப்படி வளர்க்கப்படுகின்ருர்கள் என்பதைப் பொறுத்தே பெரும்பாலும் நாட்டின் வருங்காலம் உள்ளது."

நம் குடியரசுத்தலைவர் அவர்கள் கொண்டிருக்கும் குழந்தைகளைப் பற்றிய கருத்து அனைவருக்கும் இசைவானதே. ஆனல் நடைமுறையில் குழந்தைகளின் வளர்ச்சி முழுமை பெறவில்லை. இதனையும் திரு. ரெட்டியவர்கள் கூறத்தவறவில்லை.

"......அரசியல் சாசனத்தில் உறுதியளிக்கப்பட்டபடி எல்லாக் குழந்தைகளுக்கும் துவக்கக் கல்வி கிட்டவில்லை. அரசியல் சட்டம் அமலுக்குவந்து பத்து ஆண்டுகளுக்குள் இது நிறைவேற்றப்பட்டிருக்கவேண்டும். நமது முயற்சிகளை இரட்டிப்பாக்கினுல்கூட இந்த லட்சியத்தை அடையக் குறைந்தது முப்பது ஆண்டுகளாகவது பிடிக்கும்."

குடியரசுத்தலைவர் அவர்களின் பேச்சிலிருந்து, வருங்காலத்தை உருவாக்கஇருக்கும் குழந்தைகளுக்குக் கல்விவழங்குவது இன்றியமையாத தேவை என்பது நன்கு விளங்குகின்றது. அவ்வாறு வழங்கப்படவேண்டிய கல்வியில் சமூகத்தின் பண்பாட்டு வளர்ச்சிக்கு அடிப்படையாகத் திகழும் சமயக்கல்வியும் முறையாக இணைக்கப்பெற வேண்டும் என்பதே இந்த நேரத்தில் நல்லோர்கள் உள்ளத்தில் எழும் விருப்பமாக அமையமுடியும்.

**அறிவறிந்த மக்கட்பேறு :**

செல்வங்களில் எல்லாம் சிறந்த செல்வம் அறிவறிந்த மக்கட் செல்வமே. மக்கள் என்ருல் ஆண்-பெண் இருபாலரையுமேகுறிக்கும். மக்கள் நல்லவர்களாகவும், வல்லவர்களாகவும் விளங்குதல் இன்றியமையாதது. பெற்ருேர்கள் நன்மகவு பெற நற்சிந்தனையோடு நோன்பு இயற்றவேண்டும். இறையருளை நினைந்து செய்யப்பெறும் தவம் ஒருகாலும் பொய்ப்பதில்லை. திருஞானசம்பந்தரைப் பெற்றெடுக்கச் சிவபாதஇருதயரும் பகவதியம்மையும் தவமியற்றினர் என்பார் சேக்கிழார்.

"மனையறத்தில் இன்பமுறும் மகப்பெறுவான் விரும்புவார்
அனையநிலை தலைநின்றே ஆடியசே வடிக்கமலம்
நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீருக்கும்
புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றும் தவம்புரிந்தார்."

பெற்ருேர்களின் பண்பாட்டிலிருந்தே பிள்ளைகளின் பண்பாடு அமையும். பிள்ளைப்பேற்ருல் வரும் இன்பம் முழுமைபெறவேண்டு

மானுல், குழந்தை நல்லறிவு மிக்கவனுக வளர்தல் வேண்டும். ஆசிரியர் திருவள்ளுவரும்,

> "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
> மக்கட்பே றல்ல பிற"

என இதனை வற்புறுத்தினுர். அண்மையில் நமது தமிழ்நாடு ஆளுநர் மேதகு பிரபுதாஸ்பட்வாரி அவர்கள் குழந்தைகளைப்பற்றிக் கூறியன நினைந்து போற்றத்தக்கதாக அமைந்துள்ளது. 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்திலே' என்பர். ஆளுநர் குழந்தைகளைத் தேவதூதர்கள் என்றே பேசுகின்ருர்.

> "இன்றைய குழந்தைகள் நமது நாட்டின் வருங்காலக் குடிமக்கள். மனிதகுலத்தின் தலைசிறந்த, விலைமதிக்க வொண்ணுத தனம். குழந்தைகள் கடவுளின் தூதர்கள். குழந்தைகள் இல்லை என்ருல் உலகம் எவ்வளவு துயரம் கொண்டதாக இருக்கும் என்று நான் அடிக்கடி நினைப்பது உண்டு என்று ஆங்கிலக் கவிஞர் எஸ். டி. கோல்ரிட்ஜ் கூறுகிருர். நமக்குப் பரந்த இதயங்களை உண்டாக்கவும், இரக்கமும், அன்பும் பொங்கும் படிச்செய்யவும் ஆண்டவன் குழந்தைகளை அனுப்பிவைக்கிருன்."

ஆளுநர் அவர்களின் கருத்துக்கள் முற்றிலும் ஏற்புடையன. இத்தகு அரிய குழந்தைச் செல்வங்களின் வளர்ச்சியில் சமூகம் மற்றும் சமயங்களின் இன்றியமையாத பங்கினை - இவை ஆற்றவேண்டிய கடமைகளை இங்கே நினைவுகூர்வது இன்றியமையாதது.

**அரசின் கடமை பெரிது:**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்கப் பாடல் ஒன்று ஒரு குழந்தையின் முழுமையான வளர்ச்சியில், பலருடைய பங்கும் எவ்வாறு அமையவேண்டும் என்று அழகுற வற்புறுத்துகின்றது. ஒருதாய் பேசுவதாக அமைவது அப்பாடல்.

> "ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;
> சான்ருே ணக்குதல் தந்தைக்குக் கடனே;
> வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
> நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே;
> ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
> களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே."

பொன்முடியாரின் இப்பாடல் 'நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே' என்றவரி ஆழ்ந்து நோக்கத்தக்கது நடை என்பது இங்கே ஒழுக்கத்தைக் குறிப்பது. எனவே, ஒரு குழந்தையின் நல்லொழுக்கமும், அதனுல் விளையும் பண்பாடும் அரசின் முயற்சியால் அமைதல்

வேண்டுமென்பது நன்கு உணரப்படுகிறது. ஒரு குழந்தையின் ஒழுக்கம் மற்றும் பண்பாட்டு வளர்ச்சியால் சமயம் வழங்கும் கொடை பெரிது. அதனுல்தான் குழந்தை வளர்ச்சியில் - அதன் கல்வியில் நாட்டங்கொள்ளும் அரசு சமய போதனையிலும் கவனம் செலுத்த வேண்டும் என நாம் வற்புறுத்துகின்ருேம்.

'இளமையில் கல்' என்றும், 'இளமையில் கல்வி சிலையில் எழுத்து' என்றும் நம் மூதாதையர்கள் கூறிப்போந்தனர். கல்வி இளமை முதற்கொண்டே முறையாகத் குழந்தைகளுக்கு வழங்கப் பெறவேண்டும். கல்வியின்றி மனித சமுதாயத்தின் வளர்ச்சி என் பது வெறும் பகற்கனவே ஆகும். வளர்ச்சி என்பது சமூகத்தில் சிலரது வளர்ச்சியை மட்டுமோ, அல்லது புறவுலகத் தேவைகள் நிறைவு பெறுவது மட்டுமோ வளர்ச்சியாகிவிடமுடியாது. சமய உலகில் வளர்ச்சி என்பது தனிமனித வளர்ச்சிமட்டுமன்று. அது சமூகத்தின் ஒட்டுமொத்தமான வளர்ச்சியையும் குறிப்பது. அனை வரையும் பண்படுத்தி வளர்க்கும் பொறுப்புடைமையால் சமயம் சுட்டும் வளர்ச்சி விரைந்ததாக இருக்கமுடியாது. ஆனுலும், உறுதி யானதாக அமையும் என்பதில் ஐயமில்லை எனவே, விரைவாக இல்லாவிடினும் பண்பாட்டோடும், நல்லொழுக்கத்தோடும் உரு வாகும் ஒரு சமுதாயத்தின் முறையான வளர்ச்சிக்குச் சமய அறிவும் சமயக் கல்வியும் மிக இன்றியமையாததாகிறது. இளமைக்காலத்தி லிருந்து கல்வி வழங்கப்பெற்றும் விடுதலைபெற்ற இந்திய நாட்டில் முப்பதாண்டுகளுக்கு மேலாகியும், உயர்ந்த சமூகப் பண்புகள் மல ராது போனதற்குக் காரணம், சமயக் கல்வியை நாம் புறக்கணித் தது தான் என்பதை ஆழ்ந்தநோக்குடையவர்கள் எளிதில் அறியலாம். இவ்வகையில் தம் குழந்தைகளை உருவாக்கும் பொறுப்பு, பெற்ருேர் களுக்குமட்டுமன்று; அரசியல் - சமூகம் - மற்றும் சமயத் தலைவர் களுக்கும் உண்டு. இப்போதாவது விழிப்போடு நமது குழந்தைகளின் பண்பாட்டு வளர்ச்சியில் உரிய நாட்டத்தை நாம் செலுத்தாவிட்டால் வருங்காலச் சமுதாயம் நம்மைப் பழிக்கும் என்பது ஒருதலை.

**விருப்பமும் வேண்டுகோளும் :**

இன்றைய இந்திய மக்களிடம் சமயநம்பிக்கை - மற்றும் பக்தி இல்லையா என்று கேட்கலாம். இருக்கிறது; குருட்டுத்தனமான-கண் மூடித்தனமான பக்தியாகவே அது உள்ளது. தரந்தெரிந்து-தத்துவம் புரிந்து கலை உணர்வு செழிக்கும்போதுதான் சமயம் வழங்கும் உண்மையான கொடை எவ்வளவு மகத்தானது என்று விளங்கும். வேத வழிப்பட்ட இந்து சமயத்தோடு, புத்தம், சமணம், இஸ்லாம், கிருத்துவம் போன்ற பல சமயங்கள் இந்தியாவில் உள்ளன. வேற்றுமையில் ஒற்றுமை காணும் பண்பு மக்களிடையே முழுமை

பெற இயலாதுபோனதற்குக் காரணம் ஆழ்ந்த சமய உணர்வு நம் குழந்தைகளுக்கு வழங்கப்பெருமையே. இந்தக் கடமையை அரசு தட்டிக் கழிப்பது அறமாகாது. சமயச் சார்பற்ற அரசு என நம்நாடு அறிவிக்கப்பட்டிருக்கிறது. இதற்குப் பொருள் எந்த ஒரு சமயத்தையும் அரசு சார்ந்திருக்காது, வற்புறுத்தாது என்பது பொருளே தவிர சமய வளர்ச்சியில் நாட்டமே காட்டாது என்பது பொருளாக இருக்க முடியாது. சிறுபான்மை மொழியினர்களுக்காக நமது பள்ளிகளில் தனி வகுப்புக்கள் நடத்தப்படுவதுபோல, சிறுபான்மைச் சமயத்தார்க்கு வேருகவும், பெரும்பான்மையோர்க்கு வேருகவும் சமய பாடத்தைக் கட்டாயமாக்கி இளமைமுதலே மாணுக்கர் உள்ளத்தில் நல்லறப்பயிர் வளர்க்க அரசு இந்தக் குழந்தைகள் ஆண்டிலாவது முன்வர வேண்டும் என்பது நமது விருப்பமும் வேண்டுகோளுமாகும்.

**சிந்திப்பீர் ! செயல்படுவீர் !**

வானெலியில் அந்தந்தச் சமய அறிஞர்களால் அவரவர்களின் சமயக் கருத்துக்கள் நெறிவிளக்கம் அருள்வாக்கு என்றவகையில் விரித்துரைக்கப்படுகின்றன. பல்வேறு சமயப் பாடல்கள் ஒலிபரப்பப் படுகின்றன. இத்தகைய செயல்களால் சமயப்பூசல்கள் ஏதும் சமூகத்தில் நிகழ்ந்துவிடவில்லை. எனவே சமயக் கல்விக்கு ஊக்கமூட்டி, அவ்வத்துறையைச்சார்ந்த சான்ருேர்களின் துணையோடு, முறையான பாடத்திட்டங்களை வகுத்து, இளமைமுதற்கொண்டே கட்டாயமாகக் குழந்தைகள் உள்ளத்தே சமய சிந்தனைகளை உருவாக்கி வளர்க்கும் பொறுப்பினை அரசு மேற்கொள்ளவேண்டுவது மிகவும் இன்றியமையாதது. பௌத்தத்தை அரசியல் சமயமாகக் கொண்டிருக்கும் இலங்கையில் பல்வேறு சமய பாடங்களும் முறையாகக் கற்பிக்கப்பட்டுவருவதை இங்கு நினைவுகூர்தல் பொருந்தும். சமயக்கல்வி ஊட்ட வகைசெய்க என வேண்டுவது சமயத்திற்குச் சிறப்புச்சேர்க்க அல்ல ; சமயக் கல்வியால் ஒழுக்கமும், பண்பாடும் பெற்று வளரும் வருங்கால சமூகம், தன்னடக்கமும் சகிப்புத்தன்மையும் உடையதாய், அரசுக்கு சிக்கலற்ற உழைப்பினை நல்கும் என்பதே இதன் அடிப்படை. நடுவண் அரசும், தமிழ்நாடுஅரசும் குழந்தைகள் சர்வதேச ஆண்டில், இந்த நல்ல பணியில் நாட்டம் செலுத்துவார்களானல், அதுவே, குழந்தைகளுக்குச் செய்யும் உண்மையான சிறப்பாக இருக்கும். பெற்ருேர்களும், ஆசிரியர்களும், சமயத்தலைவர்களும், சமூக அறிஞர்களும் இவ்வகையில் அரசினை வற்புறுத்துதல் மிகச் சிறந்த சமூகப்பணியாகும் என்று நம்புகின்ருேம்.

வாழ்க வையகம் !

வளர்க குழந்தைகள் !

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26-ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

வழங்கியருளிய

# ஆசியுரை

---

ஒருசுடராய் உலகேழும் ஆனான் கண்டாய்
ஓங்காரத் துட்பொருளாய் நின்றான் கண்டாய்
விரிசுடராய் விளங்கொளியாய் நின்றான் கண்டாய்
விழவொலியும் வேள்வொலியும் ஆனான் கண்டாய்
இருசுடர்மீ தோடா இலங்கைக் கோனை
ஈடழிய இருபதுதோள் இறுத்தான் கண்டாய்
மருசுடரின் மாணிக்கக் குன்று கண்டாய்
மழபாடி மன்னு மணாளன் றானே.

**பிரணவம் உணராப் பிரமன் :**

திருக்கயிலாயத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பிரமதேவன் சென்று தரிசித்துத் திரும்பினான். திரும்பிவரும்போது முருகப்பெருமான் கோபுரவாயிலில் இருந்தும் பிரமதேவன் முருகனைத் தொழாது சென்றான். இதனைக்கண்ட முருகப்பெருமான் பிரமனை அழைத்தார்; நீ யார்? உனது தொழில் யாது? என்று வினவினார். அதற்குப் பிரமன் தான் பிரமதேவன் என்றும், தனக்குத் தொழில் படைப்புத்தொழில் என்றும் கூறினான். படைப்புத்தொழில் என்றால் படைப்புக்கு மூலமான வேதம் தெரிந்திருக்கவேண்டுமே; வருமோ? என்றார். பிரமன் வரும் என்று சொல்ல, முருகன் சொல்லுக எனக் கட்டளையிட்டார். பிரமன் ஓம் என்று தொடங்கினான். உடனே முருகன், இந்த ஓம் என்ற பிரணவத்திற்கு முதலில் பொருள்சொல்லி விட்டு அதற்குமேல் வேதம் ஓதுக என்றார். பிரமன் பிரணவத்திற்குப் பொருள் தெரியாது விழித்தான். பிரணவப்பொருளே தெரியாத நீ

படைப்புத்தொழிலை எப்படிச்செய்கிறாய்? உனது படைப்பும் இப்படித் தான் குறையுடையதாக இருக்கும்; எனவே நீ குற்றவாளி என்று கூறி, நான்கு தலைகளிலும் குட்டிச் சிறையில் இட்டார்; படைப்புத் தொழிலையும் தாமே மேற்கொண்டார் முருகப்பெருமான். இஃதறிந்த பரமேசுவரன், முருகன்வாயிலாகவே பிரமனைச் சிறைவிடச்செய்தார்.

## குடிலை உரைத்த குமரன் :

முருகப்பெருமானைத் தமது தொடைமீதிருத்தி, பிரணவப்பொருள் உமக்குத் தெரியுமோ என்று வினவினர். 'தேவரீர் உமாதேவிக்கு ரகசியமாக உரைத்த பிரணவப்பொருளைப் பிறர் அறியச் செப்பலாமோ என்றார் முருகன். பரமேசுவரன் திருச்செவி சாய்த்தார். முருகன் பிரணவப்பொருளை ரகசியமாக உரைத்தார். இதுவே கந்தபுராணம் கூறும் வரலாறு. ஆனால் முருகன் பிரணவத்திற்கு என்ன பொருள் சொன்னார் என்பது ரகசியமாகவே இருக்கிறது. இருந்தபோதிலும் ஓங்காரப்பிரணவத்தின் பொருள் வேதங்களின் முடிபாக விளங்கும் உபநிடதங்களில் தெளிவாகப் பேசப்படுகின்றது. கந்தர்கலிவெண்பா போன்ற நூல்களும் பிரணவப்பொருளைப் பெரிதும் விளக்குகின்றது. இவற்றின் உதவிகொண்டே பிரணவப்பொருளை நம்மால் உணர முடிகிறது.

## பிரணவப்பொருள் :

ஓம் என்பது பிரணவம் என்று பேசப்பெறும். அகாரம், உகாரம், மகாரம், நாதம், விந்து ஆகிய ஐந்து உறுப்புக்களை உடையது பிரணவம். இவற்றுள் அகார உகார மகாரம் என்ற இம்மூன்றும் கூடும் போது ஓம் என்ற பிரணவம் உண்டாகும். அது ஓம் என்று ஒலிக்கும் போது நாதமாகவும், ஓம் என்று வரிவடிவுகொள்ளும்போது விந்து வாகவும் விளங்கும்.

பிரணவம் சமஷ்டிப்பிரணவம், வியஷ்டிப்பிரணவம் என்று இருவகைப்படும். சமஷ்டிப்பிரணவம் ஓம் என நிற்பது. வியஷ்டிப் பிரணவம் அகர, உகர, மகர, விந்து, நாதம் என நிற்பது. சமஷ்டி என்பது தொகுப்பாகும். வியஷ்டி என்பது வகுத்துச்சொல்வதாகும். சமஷ்டிப்பிரணவத்திற்குப் பொருள் சிவபெருமானே ஆவார். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலையும் முறையே அ—பிரமன், உ—திருமால், ம—உருத்திரன், விந்து — மகேஸ்வரன், நாதம் — சதாசிவன் என்னும் ஐவரையும் கொண்டு நடத்துபவன் சிவபெருமானே. இது வியஷ்டிப்பிரணவம் எனப்படும். இவ்வைந்தும்கூடியதே ஓங்காரப்பிரணவம் என்பதைக் குமரகுருபரர், "ஓதியஐந் தோங்காரத் துள்ஒளிக்கும் உள்ளொளி யாய், ஐந்தொழிற்கும் நீங்காத பேருருவாய் நின்றோனே" என்று

கந்தர் கலிவெண்பாவில் கூறுவதால் நன்கு தெளியலாம். எல்லா வற்றிற்கும் முதலாயுள்ள சிவபரம்பொருள் ஐந்தொழில் அதிபர் களிடத்தும் ஒளித்துநின்றே ஒளியூட்டிச் செயல்படுகிறது என்ற நயம் வியந்து போற்றற்பாலது. பரம்பொருள் உடனுயிருந்து இயக்கினுலும் ஐந்தொழிற்கும் அப்பால் கடந்தே நிற்கிருன் என்பதை யும் குமரகுருபரர் அக்கந்தர்கலிவெண்பாவிலேயே "ஐந்தொழிற்கும் அப்புறமாய்" என்ற தொடரால் குறிப்பிடுகிருர்.

**உடநிடதங்களில் ஓம் எனும் பொருள் :**

அதர்வவேத மாண்டூக்ய உபநிஷத்தில், இந்தப் பிரபஞ்சம் முழுவதும் ஓம் என்னும் எழுத்தாகச் சொல்லப்படுகின்றது; அந்த எழுத்தின் விரிந்த பொருளாகவும் இருக்கிறது; சென்றது, நிகழ்வது, வருவது யாவும் ஓங்காரமே என்று அறிவிக்கப்படுகிறது.

அதர்வவேத அதர்வசிகோபநிஷத்தில், காணப்படுகின்ற பிரபஞ்சமெல்லாம் ஓம் என்ற எழுத்தேயாம்; உலகத்திற்கு இதமா யுள்ளதும்இதுவே; பிரமனைச்சார்ந்தது; சர்வவேதசாரமானது; சோமன் என்ற உமாநாதனைத் தேவதையாக உடையது; ஓம் எனும் பிரணவ அட்சரமே ஆதியில் உபதேசிக்கப்பட்டது; அதுவே தியானம்; அதுவே தியானிக்கற்பாலது என்று அறிவிக்கப்படுகிறது.

**பிரணவத் தோற்றம் :**

இவ்வளவு பெருமை வாய்ந்த மகாமந்திரமாகிய பிரணவம் தோன்றிய வரலாற்றைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசிய மாகும். பரமேசுவரன் உயிர்கள்மீது வைத்த பெருங்கருணையால் உயிர்கள் உய்திபெறும் பொருட்டு உலகத்தைப் படைக்கத் தொடங்கினுர். முதலில் சுத்தமாயை என்னும் குடிலையைத் தமது ஒளியால் கலக்கினுர். கலக்கியபோது முதன்முதலில் தோன்றிய நாதமே ஓம் என்ற பிரணவமாக உதித்தது. அது பின்னர் விந்து தத்துவமாக விரிந்து பரவியது. எவ்வாறு எனின்? இரண்டு எதிர் மறையான மின்சக்திகள் அதாவது பாயும் சக்தி ஒன்று, தாங்கும் சக்தி மற்ருென்று, ஆக இவ்விரண்டும் ஒன்ருெடொன்று சேரும்போது அவற்றினின்றும் ஒளியும் ஒலியும் தோன்றுவதுபோல (மின்னல் ஒளியும் இடி ஒலியும் இதற்குச் சான்று) பரம்பொருளின் அருளொளி குடிலை என்னும் சுத்தமாயையில் பொருந்தியபோது தோன்றிய ஒலியே ஓங்கார நாதமாகும். ஒளியே ஓங்கார வரிவடிவமாகும்; அதாவது விந்துவாகும். வைதிக சைவத்துள் கூறப்பட்ட தத்து வங்களுக்கெல்லாம் முதன்மையானது நாததத்துவமே. இதுவே எல்லா உயிர்கட்கும் அறிவை எழுப்பி அறிவாய் விளங்கிநிற்பது.

**பிரணவத்தின் மறுபெயர்கள் :**

பிரணவம் என்ற சொல்லுக்குப் பொருள் உயிர்களால் துதிக்கப் படுவது என்பதாகும். ஓம் அல்லது பிரணவம் என்பது சிவபிரான் எழுந்தருளும் பீடமாகவும் அதாவது இருப்பிடமாகவும், ஏனையதேவர் கட்குப் பிறப்பிடமாகவும், அனைத்து மந்திரங்கட்கும் வேதங்கட்கும் மூலமாகவும் விளங்குவது. தாரகம், ஏகாக்ஷரம், ஓங்காரம், ஓம் மந்திரார்த்தம், மந்திரமூலம், மந்திரநாயகம், வெட்டாதசக்கரம், குடிலை என்பன இதன் மறுபெயர்களாகும்.

**வேதத்தில் பிரணவம் :**

வேதம் நான்கனுள் அதர்வம் நீக்கி இருக்கு, யசுர், சாமம் என்னும் மூன்றே கொள்ளப்படும். அவற்றுள் இருக்குவேதத் தொடக் கத்தில் " அக்நிமீளே " என்று அகரமும், யசுர்வேதத்தின் நடுவில் "யோநிஸ்ஸமுத்ரோபந்து" என்று உகரமும், சாமவேதத்தின் இறுதி யில் " ஸ்மாநம்வரம் " என்று மகரமும் அமைந்திருப்பதால் ஓங்காரத் தின் பொருள் சிவபெருமானே என்பதை உணர்த்தியது. தமிழ்வேதத் திலும் முதல்திருமுறையில் காயத்திரியின் முதலெழுத்தாகிய தகரத் தோடுசேர்த்து தகர ஓகாரத்தில் "தோடுடைய" என ஞானசம்பந்தர் தொடங்கியிருப்பதும், பன்னிரண்டாம் திருமுறையில் உலகெலாம் என மகர ஒற்றில் முடிந்திருப்பதும் திருமுறைகள் ஓங்காரப் பிரணவ மாயிருப்பதை உணர்த்தும். மேலும் திருமுறைக்குப் பொருளாவார் சிவபரம்பொருளே என்பதையும் நன்கு தெளிவிக்கும்.

**பிரணவம் உணர்த்திய பெருமான் ;**

சுருங்கச் சொல்லின் ஓங்காரப் பிரணவ நாதமே பரம்பொருளின் முதல் படைப்பு; ஆதியெழுத்து. அவ்வெழுத்தின் பொருள் அம்மை அப்பராக விளங்கும் சிவபரம்பொருளேயாம். உலகைச் சுற்றிவந்து மாங்கனிபெற வேண்டிய விநாயகர் அம்மையப்பரை வலம்வந்து கனி பெற்றதாலும், திருவாசகத்திற்குப் பொருள்கேட்டபோது மணிவாசகர் தில்லை நடராசப்பெருமானைக் காட்டியதாலும் பிரணவத்தின் பொருளும் பரம்பொருளே என இனிது உணரலாம்.

யோ வேதாதௌ ஸ்வர: ப்ரோக்த:
வேதாந்தே ச ப்ரதிஷ்டித:
தஸ்ய ப்ரக்ருதி லீநஸ்ய
ய: பரஸ்ஸ மஹேஸ்வர :

— யசுர்வேதம்.

# தெரிந்துகொள்ளுங்கள்

1. ஸ்ரீ விநாயகர்பூஜைக்கு அறுகு அவசியம்வேண்டும். "அறுகு இல்லாது செய்யும் என் பூஜையும் (பூஜைசெய்கின்றவர்களுக்கு) அனர்க்கமாக அதாவது பயனின்றிப் போகக்கடவது" என்பதை ஸ்ரீ விநாயகரே மற்றதேவர்களுக்குச் சொல்லியுள்ளார். எனவே அறுகு இல்லாமல் ஸ்ரீ விநாயகர் பூஜை செய்யக்கூடாது.

2. புஷ்பங்களைச் சுவாமிக்குச் சாத்தும்போதோ அல்லது அர்ச்சனை செய்யும்போதோ இதழ் இதழாகப் பிரித்தோ கிள்ளியோ சாத்தக்கூடாது. "புஷ்பச் சேதாத் தௌர்பாக்யம்" என்றபடி புஷ்பங்களைக் கிள்ளிச் சாத்துவதால் துர்ப்பாக்கியங்கள் உண்டாகின்றன.

3. இறைவனுக்குச் சமர்ப்பிக்கப்படும் தாம்பூலம், உடைக்கப் படாத – சீவப்படாத ஒரு முழு கொட்டைப்பாக்கும் நான்கு வெற்றிலைகளும் உடையதாக இருப்பதுதான் உகந்தது. சீவலோ பீட்டன் பாக்குகளோ உகந்ததல்ல.

4. பூஜைசெய்பவர் பூஜையை ஒருபோதும் தெற்குநோக்கியோ மேற்குநோக்கியோ இருந்துகொண்டு செய்யக்கூடாது.

5. ஞாயிறு திங்கள் செவ்வாய் வெள்ளி ஆகிய நான்குதினங்களிலும், சப்தமி துவாதசி ஆகிய இருதிதிகளிலும், சூரிய சந்திர கிரஹண தினங்களிலும், கிருஷ்ணபக்ஷ அஷ்டமி கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி அமாவாசை பௌர்ணமி மாதப்பிறப்பு ஆகிய ஐந்து பருவங்களிலும், விடியற்காலை சாயங்காலம் இரவு ஆகிய நேரங்களிலும் துளசியை எடுக்கக்கூடாது (பறிக்கக்கூடாது). அப்படி எடுத்தால் விஷ்ணுவின் தலையையே கொய்வதற்குச் சமமாகும். இதற்குப் பிராயச்சித்தமே இல்லை.

6. அக்ஷதை என்பது நுனி உடையாத - நசுங்காத முழு அரிசியில் நல்ல குங்குமமும் நெய்யும் சேர்த்துச் செய்வதே ஆகும். இப்படி இல்லாமல் இருப்பது அக்ஷதை இல்லை க்ஷதையாகும்.

தொகுத்தவர் :— **திரு. ச. நடராஜன்:**

போஸ்ட்மாஸ்டர்,

பழைய கூடலூர், தஞ்சை மாவட்டம்.

# சிவஞானசித்தியார் தெளிபொருள் விளக்கம்

தருமையாதீனப்புலவர், சித்தாந்தக்கலைமணி,

திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

(மலர் 38, இதழ் 1 பக்கம் 36 - ன் தொடர்ச்சி)

அங்குரம் வித்தின் கேட்டில் தோன்றுமது போல
அனைத்துருவும் கெட்டுவழி ஆகும் என்னில்
அங்கவற்றுக் காக்கக்கே டறைந்தாய்; 'எல்லாம்
அநித்தம்' எனும் உரைமறந்தாய் ; அருகனும்ஆ னாய்நீ;
' இங்குமுளை இலைமரமாய் எழுந்தீண்டிச் செல்லா(து)
இறந்ததே; எழுந்தபடி நில்லா தென்னின்
மங்கியிடா தேபால தருணவிருத் தையாய்
வரும்வடிவு திரிந்துநின்று மாயும் காணே.'' 106

## இதன் தெளிபொருள்

வித்துக்கெட்டவுடன் அக்கேட்டில் இடையீடு இன்றி முளை தோன்றுதல் போல, முற்கணத்தில் தோன்றிய பொருள் பிற்கணத்திற் கெட்டவழி அக்கேட்டிற்றானே மற்றொரு பொருள் தோன்றும். தோற்றம் கேட்டினை மறைத்தலால் தோற்றமே தொடர்ந்து காணப்பட்டு ஒருபொருளே நிலைத்துள்ளதுபோலத் தோன்றுகின்றது. காணப்படுகின்ற எல்லாப் பொருள்களும் இத்தன்மையனவே ஆதலின் உள்ளது சூனியமே எனப் புத்தா, நீ கூறின், எல்லாப் பொருளும் சூனியம் என்று சொல்லிவிட்டுப் பின்பு, 'முற்கணத்தில் தோன்றும் பிற்கணத்தில் அழியும்' என்று பொருள்கட்குத் தோற்றமும் அழிவும் கூறுதல் மாறுகோளுரையாய் சூனியவாதம் நிலைபெறுதொழியும். 'சூனியமுந்தான்; தோன்றி அழிவதுந்தான்' எனக் கூறின், அது, ஒருபொருளை, 'உண்டுந்தான், இல்லையுந்தான்' எனக்கூறும் சமண மதக் கொள்கையாய்ப் போம். 'ஒரு பொருளே தொடர்ச்சியாய் உற்றதாயின், முன் இருந்தபடியே பின்னும் இருத்தல் வேண்டுமன்றி வேறுவேறு வகையாய் இருத்தல்கூடாது. வகைவேறுபாடே பொருள் வேறு என்பதனைக் காட்டும். ஆகவே, முளையாய் இருந்ததும் வேறே;

பின் இலையானதும் வேறே; பின் மரமானதும் வேறே. பிற்கணத்தில் தோன்றும் பொருள் முற்கணத்தில் தோன்றிய பொருளினும் மிகுந்து காணப்படுதல் அவற்றின் பெற்றி என நீ கூறின், முதற்கண் குழவியாய்ப் பின்பு காளையாய்ப் பின்பு முதியதான உடம்பு ஒன்றேயன்றி வேறுவேறன்று கண்கூடாதலின், அதனை வேறுவேறு உடம்புகள் என்று சாதிக்கும் உனது சாதனை காட்சிக்கு முரணாய் ஒருவராலும் கொள்ளப்படாதாம். ஆகவே முன்னர்ப் பிறந்த அந்த உடம்பே பால தருண விருத்த நிலைகளை உடையனவாய் நிலை வேறுபட்டு, முடிவில் இறந்தொழியும் இதனை நீ அறி.

'பால தருண விருத்த நிலையை எய்திய உடம்பு ஒன்றாகாது வேறு வேறாயின் முன் நிலையில் எய்திய அனுபவங்கள் பின் நிலையில் அறிவின்கண் தோன்றா' என்பது கருத்து.

அங்குரம் - முளை, 'விருத்தை' என்றது வடமொழி.

(தொடரும்)

---

# அன்னை அருள்மாலை

திருமுறைக் கலாநிதி

**வேளூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.**

கழனியிற் கயலாரும் திருப்பயற் றூர்மருவும்
காவியங் கண்ணியம்மை
கறைக்கண்ட னுறைதிருச் செங்காட்டங் குடிநாளும்
கருதுதிருக் குழல்நாயகி
முழவதிரும் திருமருகல் வண்டுவார் குழலம்மை
மோகமுறும் சாத்தமங்கை
முன்னின்று காக்குமிளங் கன்னிமலர்க் கண்ணம்மை
முத்துலவு திருநாகையில்
அழகாரும் நீலாய தாட்சி திருச்சிக்கல்
அரசிவேல் நெடுங்கண்ணியே
அரவுபிறை யணிசடையன் அமர்திருக் கீழ்வேளூர்
ஆளும்வன முலைநாயகி
பழவினை தீர்க்கும்தே வூர்மதுர பாஷிணி
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம் அடைந்தென்றும்
பணிவேற்கருள் அன்னையே. (18)

# ஆலய ஊழியர்களைக்
# காப்பாற்றியே தீருவோம் !

[ 6—1—79 இல் தஞ்சைக்குவந்த தமிழக முதலமைச்சர் மாண்புமிகு M. G. இராமச்சந்திரன் அவர்களிடம், ஆலய ஊழியர்களது நலம்குறித்து அரசு என்ன செய்யப் போகிறது என்று தஞ்சை நிருபர்கள் கேட்டபோது அமைச்சர் கூறியது.]

***தமிழகத்தில் அதிகமான ஆலயங்கள் தஞ்சைமாவட்டத்தில் இருக்கின்றன; அந்த ஆலயங்களுக்குச் சொந்தமான நிலக்குத்தகை வசூலாகாத காரணத்தினால் ஆலய நிர்வாகம் செயல்பட முடிய வில்லை; ஆலய ஊழியர்களுக்கு ஊதியம் கிடைக்கவில்லை; இந்த நிலையை மாற்ற அரசு என்னசெய்யப்போகிறது என்ற கேள்விக்கு முதல்வர் பதில் அளிக்கையில் ஆலய நிலங்களின் குத்தகைதாரர்கள் எண்ணிக்கையைவிட ஆலயங்களில் பணியாற்றும் ஊழியர்களின் எண்ணிக்கை அதிகம். அந்த ஊழியர்களின் வாழ்க்கைத்தரம் உயர-தவருமல் ஊதியம் கிடைக்க வழிவகைகள் செய்து, அத்துணை ஊழியர் களையும் காப்பாற்றியே ஆகவேண்டும். இந்தப் பொருளாதார அடிப் படையைச் சிந்தித்து மனிதாபிமானத்துடன் குத்தகைதாரர்கள் குத்தகையைக் கொடுக்க முன்வரவேண்டும். அப்படிக் கொடுக்க அவர்கள் முன்வரவில்லை என்ருல் அதற்குத் தேவையான நட வடிக்கைகளை எடுத்து, இந்த அரசு குத்தகை பாக்கியை வசூலித்தே தீரும் என்ருர்.

நன்றி ! — தினமலர், 8—1—79.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

**Dharmapuram Adhinam**

**Sri kambahareswaraswamy Devasthanam, Thirubuvanam**

I had the great pleasure of having Dharsan of this morning. I enjojed a great spiritual experience during my worship of Diety.

The temple is maintained very well All the Credit goes to efficiant managemet of the temple by the Adhinam.

(S-d) Somasundaram.

25-12-78, Addl Director of Rural Developement, Madras.

# சிவமூர்த்தங்கள்

நஜன்

## சரபமூர்த்தி

“யஸ்ய ஸ்மரண மாத்ரேண வைரிணும் குலநாசனம்
போக மோக்ஷ பலம் சிரேஷ்டம் புத்திமுத்தி பலப்ரதம்
சர்வாபத் பிரசமனம் சர்வாபஸ்மார நாசனம்
ராஜ சோராப ம்ருத்யூநாம் நாசனம் ஜயவர்த்தனம்
ஜ்வர ரோகக்னம் ஆபத்க்னம்

— சரபகல்பம்.

ஆணவத்தால் தானே பரம்பொருள் என்று செருக்குற்று அநீதிகள் இழைத்த இரணியனை மகாவிஷ்ணு நரசிம்மாவதாரம் எடுத்துச் சங்கரித்தார். அந்த நரசிங்கம் எளிதில் அடங்காமல் லோகத்தையே அழிக்க முற்பட்டபோது அதை அடக்கச் சிவபெருமான் எடுத்த உருவமே சரப உருவம்.

இந்த மூர்த்தத்தைக்கொண்டு சிலர் சிவன் உயர்த்தி விஷ்ணு தாழ்த்தி என்றெல்லாம் வியாக்யானம் செய்கிருர்கள். இது தவறு. ஒருசக்தி கட்டுக்கடங்காமல் போகும்போது மற்ருெருசக்தி அதைக் கட்டுப்படுத்த வேண்டியிருக்கிறது. சக்தியான அம்பிகையே உக்கிரத்திஞல் கட்டுக்கடங்காமல்போனபோது சிவபெருமான் அவள் எதிரில் வந்தார். அவள் கோபத்தில் அவரையும் தள்ளி அவர்மீது ஏறிநிற்க ஆரம்பித்தாள். உடனே சிவபெருமான் குழந்தையாக மாறிக் கத்தவே அம்பிகையின் தாயுள்ளத்திலுள்ள கருணையால் கோபம் மறைந்து குழந்தையை எடுத்துக்கொண்டு ஸ்தன்யபானமளித்தாள்.

ஆகவே ஒருசக்தி கட்டுப்படாமல்போதம்போது மற்ருெரு சக்தி அதைக் கட்டுப்படுத்தவே வேண்டியிருக்கிறது.

‘நன்ருலிரண்டு திருவடியும் நனிநீள் வாலும் முகமிரண்டும்
கொன்ஞர் சிறகும் உருத்திரமும் கொடும்பே ரார்ப்பும்’.

என்றபடி எட்டுக்கால்கள், நீண்டவால், இரண்டுதலை, பெரியசிறகுகள், கூரிய நகம் இவைகொண்ட மூர்த்தம். இதற்கு ஸிம்ஹக்னமூர்த்தி என்றும், சரபேஸமூர்த்தி என்றும் பெயர். இந்த ஸிம்ஹக்னமூர்த்தி பற்றிச் சிவபராக்ரமத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

சென்னைக்கு அடுத்துள்ள திரிசூலம் ஆலயத்தில் முகமண்டபத் தூணில் இந்த இருதலை சரபேஸர் காணப்படுகிறார்.

காமிகாகமம், ஸ்ரீதத்வநிதி, உத்தரகாரணாகமம், சரபோபநிஷத் ஆகியவை இந்தச் சரபர் உருவத்தைப்பற்றி வெவ்வேறு விதமாக விவரிக்கிறது, ஆனால்பிரசித்தமானமூர்த்தம் கும்பகோணம் திருவிடை மருதூருக்கு இடையிலுள்ள திருபுவனத்திலுள்ளது. வேறெங்குமே கிடையாது. லலிதா சகஸ்ரநாமத்தின் உத்தரபாகத்தில்,

யஸ்த் த்விதம் நாம ஸாஹஸ்ரம் ஸக்ருத் படதிபக்திமாந்
தஸ்ய யே சத்ரவஸ்த் தேஷாம் நிஹந்தா சரபேச்வர:

என்று கூறப்பட்டுள்ளது.

எவரொருவர் லலிதா சகஸ்ரநாமத்தைப் பக்தியோடு ஒருதடவை படிக்கிறாரோ அவருக்கு யார் சத்ருக்களோ அவர்களைச் சரபமூர்த்தி நாசம் செய்கிறார்.

ந்ருஸிம்ஹம், மனிதன் சிம்மம் இரண்டும் சேர்ந்த உருவம். சரபம், மனிதன் சிம்மம் பக்ஷி மூன்றும் சேர்ந்த உருவம்.

இதை அனுசரித்து நரசிம்மப் பிரயோகங்களைத் திருப்புவதற்கும் அடக்குவதற்கும் சரபஸாளுவங்கள் என்ற பிரயோகங்கள் தந்திரங் களில் சொல்லப்பட்டிருக்கின்றன. மகா உக்கிரமாகச் சொல்லப்பட்ட நரசிம்மத்தையே அடக்கியதிலிருந்து சரபமூர்த்தியே மாரகப்ரயோகங் களுக்கு மிகவும் உத்தமமானவர் என்று சொல்லப்படுகிறது.

இப்பேர்ப்பட்ட சக்திவாய்ந்த சரபரின் அனுக்கிரகத்தைப்பெற, தனியான பிரயோகங்கள் சொல்லப்பட்டிருப்பினும் ஸ்ரீவித்யோபாசகன் அவரைக் குறித்து ஆராதிக்காவிடினும் அவரே வலியவந்து தேவி உபாசகனைக் காப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

சரபமூர்த்திக்குப் பிரத்தியங்கரா, சூலினி என்ற இரு மனைவியர். பிரத்யங்கரா; அதர்வண வேதத்தில் மந்திர காண்டத்தில் சௌனக சாகையில் 32 ரிக்குகளும், பிப்பலாத சாகையில் 48 ரிக்குகளும் இவளைப்பற்றியது. இவளைக்குறித்துச் செய்யப்படும் தந்திரங்கள் நாரத தந்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

அபிசார கர்மா என்பது தெரியாதவிதமாக எதிரியினுடைய மரணத்தை விளைவிப்பது, இதற்கு ச்யேந யாகம் என்று பெயர். பிரத்யங்கரா, சரபர் இம்மூர்த்திகளின் அருள்மூலம் இந்தக்கர்மாவைச் செய்கிறவனையே அழித்துவிடலாம்.

பிரகலாதன் பிரும்மாதி தேவர்கள் இவர்களுக்கு ஏற்பட்ட நடுக்கத்தைத் தீர்த்தவராதலால் திரிபுவன ஆலய இறைவனுக்குக் கம்பகரேஸ்வரர் என்று பெயர்.

இவரை ஞாயிற்றுக்கிழமைகளில் அதுவும் சிறப்பாக இராகுகால வேளையில் ( மாலை மணி $4\frac{1}{2}$—6 ) வழிபடுவது மிகவும் சிறந்தது.

இவரை நினைப்பவர்களும் வழிபடுபவர்களும் கள்வர் பகைவர் அரசர் இவர்களால் ஏற்படும் துன்பம், எதிர்பாராத விபத்து, அகால மரணம் இவைகளிலிருந்து தப்பலாம் என்று சரப கல்பம் கூறுகிறது.

திரிபுவன ஆலயம் தருமையாதீனத்திற்குச் சொந்தமானது. இம்மூர்த்திக்கு 2—9—1973 அன்று தொடங்கப்பெற்ற **கோடியர்ச்சனை**யில் 26—3—78 அன்று அரைக் கோடி அர்ச்சனை நிறைவுபெற்று, சரபவேள்வியும் நடைபெற்றது.



---

## தெரிந்துகொள்ளுங்கள்

### ( தொகுப்பு )

மனிதனின் நாக்கில்மட்டும் மூவாயிரம் சுவை அரும்பு மொட்டுக்கள் இருக்கின்றன.

நம் உடலில் ஓடும் இரத்தக் குழாய்களை ஒரு நீண்ட குழாயாக ஒன்றன்பின் ஒன்றாக வைத்தால் அவற்றைக் கொண்டு உலகையே இருமுறை சுற்றலாம்.

நிலவு தோன்றி 450 கோடி ஆண்டுகள் ஆகின்றன.

அண்டவெளியில் உள்ள மொத்த விண்மீன்களின் எண்ணிக்கை 15000,00000000 ( ஒருலட்சத்து ஐம்பதாயிரம் கோடி ).

— **இரா. செ.**

தருமையாதீனத் திருமடத்தில்



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை

மேற்கு வங்காள உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி

மாண்புமிகு. சங்கரபிரசாத்மித்ரா அவர்களும்,

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்

திரு. B. S. சோமசுந்தரம் அவர்களும்

தரிசித்தபோது பொன்னாடை போர்த்தி ஆசியருளியது.

3—12—78

உ

சிவமயம்

# "ஞானசம்பந்தம்"

# பொங்கல் வாழ்த்து

---

**புலவர். திரு, மு. சிவச்சந்திரன் எம், ஏ.**

உழுகின்ற ஏழையின் உழைப்பு தன்னை
உளமாரப் பாராட்டும் அன்புப் பொங்கல்!
எழுகின்ற கதிரோனின் ஒளியும் நல்ல
எருதுகளின் உழைப்பினையும் போற்றும் பொங்கல்!
பழுதில்லா வாழ்வருளப் பெண்கள் கூட்டம்
பாங்குடனே பொங்குகின்ற கன்னிப் பொங்கல்!
செழுமலரின் நாற்றம்போல் மக்க ளெல்லாம்
செம்மாந்து வாழ்ந்திடவே வந்த பொங்கல்!

பொங்கலோ பொங்கலெனப் போற்றும் மக்கள்
பொங்குகமங் கலமென்ன வாழ்த்தும் உள்ளம்
எங்குமே இன்பங்கள் இழைந்து ஓட
இனியவளே! தைமகளே! வருக என்று
மங்காது வாழ்த்துகின்ற புலவர் கூட்டம்
மட்டில்லாப் புத்துணர்ச்சி கொண்டு போற்றும்
சிங்காரத் தமிழன்னை சிரித்து வாழச்
சீருடனே வந்துநின்ற பொங்கல் நன்னாள்!

குருஞான சம்பந்தர் பெயரைத் தாங்கிக்
குருவருளும் திருவருளும் கொண்டு நிற்கும்
பெரு 'ஞான சம்பந்தம்' ஏட்டின் வாழ்த்து
பெற்றிட்டால் பேறேதும் மற்றும் உண்டோ?
அருமையெனப் போற்றுகின்ற இந்த நாளில்
ஆன்றோரின் வாழ்த்துக்கள் அனைத்தும் சேர்த்துத்
தருகின்ற தமிழ்ஞான ஏடு தன்னின்
தகவான நல்வாழ்த்துப் பொங்கல் வாழ்த்து!

# திருப்பழையாறைவடதளி, திருவலஞ்சுழித் தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,
வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.

## 1. திருப்பழையாறைவடதளி

**சோழர் தலைநகர் :**

தமிழ்கூறும் நல்லுலகில் முடியுடைப் பெருவேந்தர்களாகத் திகழ்ந்தவர் சேர சோழ பாண்டியர்களாவர். அம்மூவரில் சோழ மன்னர்கள் வீற்றிருந்து அரசாளும் தலைநகரங்களாக விளங்கிய சிறப்புடையன உறையூர், காவிரிப்பூம்பட்டினம், தஞ்சாவூர், கங்கை கொண்டசோழபுரம், பழையாறை நகர் ஆகியனவாம். அவற்றுள் பழையாறைநகர் சோழர் பல்லவர்கட்கு அடங்கிச் சிற்றரசராக இருந்த காலப்பகுதியில் வாழ்ந்த இடம். பிற்காலச் சோழர் ஆட்சியில் இந்நகர் இரண்டாவது தலைநகராகச் சிறந்து விளங்கிற்று.

பழையாறையில் சோழரது அரண்மனை இருந்த இடம் சோழ மாளிகை என்னும் தனிஊராக உள்ளது. பழையாறையைச் சுற்றி நாற்புறமும் ஆரியப்படைவீடு பம்பைப்படைவீடு புதுப்படைவீடு மணப்படைவீடு என்ற நான்கு பெரும்படை வீடுகள் சோழ மன்னர்களால் அமைக்கப்பட்டிருந்தன. இந்நான்கும் இன்று தனித்தனி ஊர்களாக உள்ளன. பழையாறை பழசைஎனவும் ஆறை எனவும் தேவாரத்தில் குறிக்கப்பெற்றுள்ளது.

தேவார காலத்தில் முழையூர் திருப்பட்டீச்சரம் திருச்சத்தி முற்றம் சோழமாளிகை நாற்படையூர்கள். மேற்றளி கோணப்பெருமான் கோயில் ஆகியன பழையாறையில் அடங்கியிருந்ததாகக் காணப்படுகிறது.

சீரில் நீடிய செம்பியர் பொன்னிநன் னாட்டுக்
காரின் மேவிய களிஅளி மலர்ப்பொழில் சூழ்ந்து
தேரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து
பாரில் நீடிய பெருமைசேர் பதிபழை யாறை.

என்று சேக்கிழார் இந்நகரைச் சிறப்பித்துக் கூறுவார். இவ்வூர் கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் பழையாறைநகர் எனவும், 8-ஆம் நூற்றாண்டில் நந்திபுரம் எனவும், 9, 10 ஆம் நூற்றாண்டுகளில் பழையாறை நந்திபுரம் எனவும், 11-ஆம் நூற்றாண்டில் முடிகொண்ட சோழபுரம் எனவும், 12-ஆம் நூற்றாண்டில் இராசராசபுரம் எனவும் வழங்கப் பெற்றது.

**இருப்பிடம் :**

இத்திருத்தலம் தென்னிந்திய இருப்புப்பாதையில் தாராசுரம் புகைவண்டி நிலையத்திலிருந்து தெற்கே 5 கி. மீட்டர் தூரத்தி லுள்ளது. கும்பகோணத்திலிருந்து ஆவூர் செல்லும் நகரப் பேருந்தில் வந்து வைப்புத் தலமாகிய முழையூரில் இறங்கி கிழக்கே ஒருகிலோ மீட்டர் தூரம் சென்றால் இத்திருத்தலத்தை எளிதில் அடையலாம். அருகில் திருப்பட்டீச்சரம், திருச்சத்திமுற்றம் ஆகிய இருதலங்கள் உள்ளன.

**தலப்பெருமை :**

பழையாறைநகர் இந்நாளில் ஒரு சிற்றூராகக் காட்சிதருகிறது. முற்காலத்தில் 5 மைல் நீளமும், 2 மைல் அகலமும் உள்ள பெரு நகரமாக விளங்கிற்று. இவ்வூருக்குத் தெற்கே முடிகொண்டசோழன் ஆறும், வடக்கே திருமலைராயன் ஆறும் ஓடுகின்றன. முடிகொண்ட சோழன் ஆறு முற்காலத்தில் பழையாறு என்று வழங்கப் பெற்ற தாதலால் அதன் கரையிலுள்ள ஊர் பழையாறை என்று வழங்கப் பெற்றதென்றும், பழையாற்றின் வடகரையில் உள்ள கோயில் பழை யாறைவடதளி எனப்பெற்றதென்றும் கொள்ளல்வேண்டும். தளி – கோயில்.

சமணர்களால் மறைக்கப்பெற்றுத் திருநாவுக்கரசு சுவாமிகளால் உண்ணாநோன்பிருந்து வெளிப்படுத்தியருளியது இத்தலக்கோயில் ஆகும். முழையூர்க்கோயிலை வடதளி என்றும் பழையாறையைத் தனித் தலமென்றும், இவ்விருதலமும் பழையாறை வடதளி என இணைக்கப்பெற்றுத் திருப்பதிகம் அருளிச்செய்யப்பெற்றுள்ளது என்றும் சிலர் கூறுவர். மங்கையர்க்கரசியாரும் அமர்நீதி நாயனாரும் திருவவ தாரம் செய்தருளிய சிறப்பு இத்தலத்திற்குண்டு.

முழையூரில் உள்ள மாடக்கோயிலின் இறைவர் பெயர் அருள்மிகு தருமபுரீசுவரர். இறைவி பெயர் அருள்மிகு விமலநாயகி.

பழையாறைநகர் அக்காலத்தில் மாடவீதி தேர்வீதி முதலிய வற்றோடு பெருநகரமாக விளங்கிற்று. இங்கே வாணிபத்திற் சிறந்த

வீதிகளே, கும்பகோணம் நெல்லுக்கடைத்தெரு, நாணயக்காரச் செட்டித்தெரு என்றும் கூறுவர். நாணயசாலை இருந்த இடம் இன்று கம்பட்ட விசுவநாதர்ஆலயம் உள்ள இடமாகும் என்பர். கம்பட்டம்—நாணயச்சாலை.

இராசராசசோழனால் இத்திருக்கோயில் திருப்பணி செய்யப்பெற்று அவனது இயற்பெயராகிய அருண்மொழித்தேவேச்சரம் என வழங்கப் படுகிறது.

இராசராசன் தன் மனைவி பஞ்சவன்மாதேவியின் பள்ளி படைக் கோயிலாகக் கட்டிய பஞ்சவன்மாதேவீச்சரக் கோயில் பட்டீச் சரத்திற்கு அருகில் உள்ளது.

இராசேந்திரன் பழையாறை நகரில் குந்தவைப்பிராட்டியாரால் வளர்க்கப்பட்டான். இந்நகரின் தென்பால் ஓடும் ஆறு இராசேந்திர சோழனால் வெட்டப்பட்டு, முடிகொண்ட சோழப்பேராறு எனப்பெயர் பெற்றது. பாண்டியர், சோழர்களைவென்ற காலத்தில் பழையாறை தன்பழஞ்சிறப்பினை இழந்தது.

**கோயில் அமைப்பு :**

சோழமன்னர்களின் சிறந்த திருப்பணிகளோடு திகழும் இக் கோயில் கிழக்கு நோக்கிய அமைப்புடையது. எதிரே திருக்குளம்; சீர்கேடடைந்துள்ளது. இராஜகோபுரம் திருப்பணி முற்றுப்பெறாத நிலையில் உள்ளது. கோயில் இராசராசசோழனால் திருப்பணி செய்யப் பெற்று அவனது இயற்பெயரால் அருண்மொழி தேவேச்சரம் என வழங்கப்பெறுகிறது. இரண்டு பிராகாரங்கள் உள்ளன. இரண்டாம் கோபுரம் இரண்டடுக்குடையது. வெளிப்பிராகாரத்தில் அம்பாள் கோயில் தெற்குநோக்கி உள்ளது.

முதற்பிராகாரத்தை அடைந்தவுடன் திருக்கோயில் உயர்ந்த பீடத்தில் பக்கப்படிகளோடு அமைக்கப்பெற்றுத் திகழ்வதைக் காணலாம். இப்பிராகாரத்தில் கர்ப்பக்கிருகக் கோஷ்டங்களில் விளங்கும் தக்ஷிணாமூர்த்தி, அர்த்தநாரீசுவரர், பிர்மா திருவுருவங் களும், விநாயகர் முருகன் திருக்கோயில்களும் தரிசிக்கத்தக்கன.

கோயில் முன்மண்டபத்தில் விளங்கும் ஸ்ரீ கைலாயநாதர் திருவுருவம் பேரழகு வாய்ந்தது.

அருவியங் குன்றம் அரக்கன் பெயர்ப்ப
வெருவிய வெற்பரையன் பாவை — பெருமான்
அணியாகம் ஆரத் தழுவினாள் தான்முன்
தணியாத ஊடல் தணிந்து.

என்றபாடலுக்கு இலக்கியமாக இத்திருவுருவம் உள்ளது. அப்பர் சுவாமிகள் அருளிய,

செருத்தனைச் செயும் சேனைரக்கன் உடல்
எருத்திற விரலால் இறை ஊன்றிய
அருத்தனைப் பழை யாறை வடதளித்
திருத்தனைத் தொழுவார் வினை தேயுமே.

என்ற பாடலை ஓதி வழிபடுவோம்.

மகாமண்டபத்தில் திகழும் துர்க்கையின் திருவுருவம் நுண்ணிய வேலைப்பாடுள்ளது. வடக்குப் பிராகாரக் கோஷ்டத்தில் இருந்த இத் திருவுருவை இங்குவைத்துள்ளனர். பேரழகுவாய்ந்த இவ்வம்மையின் திருவுருவைத்தரிசித்து, சுவாமிசந்நிதியில் நின்று அருள்மிகு சோம நாதரைத் தரிசிப்போம். வெளியேவந்து அருள்மிகு சோமகலாம் பிகையை வழிபடுவோம்.

**மூர்த்திகள் :**

இறைவன் திருப்பெயர் : அருள்மிகு சோமநாதர். அம்மையின் திருப்பெயர் : அருள்மிகு சோமகலாம்பிகை. இத்திருக் கோயிலில் விளங்கும் கைலாயநாதர், அர்த்தநாரீசுரர், துர்க்கை திருவுருவங்கள் மிக்க சிறப்புடையன.

கோயிலுக்கு எதிரே விளங்கும் சோமதீர்த்தம் மிக்க பெருமை யுடையது. தைச்சங்கராந்தியில் நீராடினால் சிறந்தபயனை அடைய லாம். சித்தப்பிரமை முதலிய நோய்களைக் குணமாக்கும் சிறப்புடை யது. குளம் மிகவும் பழுதடைந்துள்ளது மற்றும் சடாயு தீர்த்தம், இந்திர தீர்த்தம், கமலதீர்த்தம் முதலியனவும் உள்ளன. **தலமரம் -** நெல்லி.

**புராணச் சிறப்புக்கள் :**

இத்தலம் கிருதயுகத்தில் வேப்பவனம் எனவும், திரேதாயுகத்தில் வாழைவனம் எனவும், துவாபரயுகத்தில் அடம்பவனம் எனவும், கலியுகத்தில் நெல்லிவனம் எனவும் வழங்கப்பெறுகிறது. நான்கு யுகங்களிலும் பிராமணர், கருடன், கங்கை, துஷ்டகேது, ஆதிசேடன் ஆகியோர் வழிபட்டுள்ளனர்.

**சோமநாதர் தோற்றம் :**

முன்னொருகாலத்தில் கருடன் தன்தாயின் அடிமைத்தனம் நீங்கத் தேவேந்திரனிடம் அமிர்தகலசம் பெற்றுக் காவிரியின்

தென்கரையில் வருங்கால் அமிர்தகடம் காரணமாக அசுரர்களுக்கும் கருடனுக்கும் சண்டை மூண்டது. கடத்திலிருந்து மூன்று துளிகள் நெல்லிவனமாக இருந்த இந்நகரில் சிந்தின. அத்துளிகள் சிவலிங்கம் அம்பிகை, தீர்த்தம் ஆகிய மூன்ருயின. கருடன் தீர்த்தத்தில் நீராடி இறைவனையும் அம்பிகையையும் வழிபட்டு உய்ந்தது. கருடன் தனியே தன்பெயரால் உண்டாக்கிய தீர்த்தம் சடாயு தீர்த்தம் என வழங்கப்பெறுகிறது. சடாயு தீர்த்தத்தில் நீராடுவோர் குட்டம்முதலிய கொடிய நோய்களினின்றும் நீங்கப்பெறுவர்.

**சந்திரன் பூசித்தது :**

சந்திரன் தக்கன் மகளிர் இருபத்தெழுவரை மணந்து அவர்களில் கார்த்திகை உரோகிணி ஆகிய இருவரிடம்மட்டும் அன்பு வைத்தொழுகினுன். தக்கன் தந்த சாபத்திஞல் சந்திரன் கலைகள் ஒன்ருென்ருகக் குறையத் தொடங்கின. கயரோகம் உற்ற சந்திரன் இந்நகரில் தன்பெயரால் தீர்த்தம் உண்டாக்கி அதில்நீராடிஇறைவனையும் இறைவியையும் வழிபட்டுக் கலை வளரவும் கயரோகம் நீங்கவும் அருள்பெற்ருன். சந்திரனுக்கு அருள்புரிந்த இறைவன் சோமகலா நாதர் எனவும், இறைவி சோமகலாநாயகி எனவும் பெயர்பெற்றனர்.

சந்திரன் உண்டாக்கிய சோமதீர்த்தத்தில் திருஷ்டகேது என்பவர் பிரதோஷம், சிவராத்திரி முதலிய புண்ணிய நாட்களில் நீராடிப் பெருநோய்நீங்கி அருள் நலம் பலவும் பெற்ருர்.

**பஞ்சகுரோசத்தலங்கள் :**

இத்தலத்தைச் சூழவுள்ள ஐந்து தலங்கள் பஞ்சகுரோசத் தலங்கள் எனப்படும். (குரோசம் - அண்மையில் உள்ளது.) அவை திருநல்லூர், திருவலஞ்சுழி, திருச்சத்திமுற்றம், திருப்பட்டீச்சரம், திருஆவூர் ஆகியனவாகும். இந்திரன் இத்தலங்களை வழிபட்டு அருள்பெற்ருன். தக்ஷிணுயன புண்ணியகாலத்தில் ஒரே நாளில் பஞ்சகுரோசத் தலயாத்திரை செய்து இந்திர தீர்த்தத்தில் நீராடி, இத்தலத்திறைவரை வழிபடுவோர் எல்லாநலங்களையும் பெறுவர்.

**அமர்நீதி நாயனுர் :**

அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய அமர்நீதிநாயனுர் இத்தலத்தில் திருவவதாரம்செய்தவர். “அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கு அடியேன்” என்று சுந்தரரால் போற்றப்பெற்ற இவர் இவ்வூரில் வணிகர்குலத்தில் தோன்றினர். சிவனடியார்களுக்குக் கோவணமும் கீளும் கொடுக்கும் தொண்டினைச் செய்துவந்தார். திருநல்லூரில் திருவிழாக் காலங்களில் திருமடம் கட்டி அடியார்

களுக்குத் திருவமுது அருத்திவந்தார். ஒருநாள் இறைவன் அந்தணப் பிரமசாரியாக இவர்பால்வந்து தன் கோவணங்கள் இரண்டினுள் ஒன்றையளித்துப் பாதுகாப்பாக வைத்திருக்கும்படிக்கூறிக் காவிரியில் நீராடச்சென்ருர். இறைவர் அளித்த அக்கோவணம் இறையருளால் மறைந்தது.

இறைவன் நீராடிப் பெருமழையில் நனைந்தவாறு வந்து தான் அளித்த கோவணத்தை அமர்நீதியாரிடம் கேட்டார். அமர்நீதியார் இறைவனளித்த கோவணத்தைக் காணுது திகைத்துப் புதியதொரு கோவணம் தருவதாகக் கூறினுர். இறைவன் இசையவில்லை. கெட்டுப்போன கோவணத்துக்கு ஈடாகப் பொன்னும் மணியும் தருவதாகக் கூறினுர். இறைவன் அதற்கிசைந்தார். துலாக்கோல் கொண்டு வரச்செய்து அதில் தன்னிடமிருந்த ஈரக் கோவணத்தை வைத்தார். அமர்நீதியார் அதற்கு ஈடாகத் தன்பால் உள்ள செல்வங்கள் அனைத்தையும் வைத்தும் துலாக்கோல் நேராகவில்லை. இறைவன் ஆணைப்படி நாயனுர் தன் மனைவி மக்களுடன் துலாக்கோலில் ஏறினுர். துலாக்கோல் நேர்நின்றது. வந்த இறைவன் வானிடைத் தோன்றி அருட்காட்சி வழங்கினுர். துலாத்தட்டு விமானமாகியது. நாயனுர் தம் குடும்பத்துடன் சிவலோகம் சென்றடைந்து இறைவன் திருவடிநீழலில் இன்புற்றிருந்தார்.

### திருநாவுக்கரசரின் உண்ணுநோன்பு :

பழையாறையில் உள்ள வடதளிக்கோயிலைச் சமணர்கள் மறைத்திருந்தனர். திருநாவுக்கரசர் இத்தலத்தை அடைந்து வடதளிக் கோயிலின் அருகே சென்றபோது அவர்தம் கைகள் வடதளி இறைவரைத் தொழுதன. அங்கு அவரை எதிர்ப்பட்ட அன்பர்கள் இங்குள்ள சிவபெருமானுக்கு உரியகோயிலை அமணர்கள் மறைத்துள்ளனர் எனக்கூறினர். திருநாவுக்கரசர் அதனைக்கேட்டு மனம்பொருது அமணர்மறைத்த சிவலிங்கப்பெருமானைத் தரிசித்தாலன்றிப்போகேன் என அவ்விமானத்தினருகே உண்ணுநோன்புகொண்டு இருந்தார். இறைவன் பழையாறை மன்னர் கனவில் தோன்றி ‘ நாம் சமணர்களால் வடதளியில் மறைக்கப்பட்டுள்ளோம்; நம்மைக் காண நாவரசன் உண்ணுநோன்பு கொண்டுள்ளான்; நம்மை அவன் கண்டு கும்பிட அமணரை அழித்துப் போக்குவாயாக ’ என்றருளினுர். அதனைக்கேட்டு வியந்த சோழமன்னன் இறைவனுணைப்படி சமணர்களை அகற்றி வடதளிக்கோயிலில் சமணர் மறைத்திருந்த சிவலிங்கப் பெருமானை வெளிப்படுத்திப் புதியவிமானம் அமைத்து நாள்வழிபாடு சிறப்புவழிபாடுகள்செய்வித்தான். அப்பரடிகளைப்போற்றிமகிழ்ந்தான். நாவுக்கரசர் தம் எண்ணம் இறையருளால் நிறைவேறியதுகண்டு

மகிழ்ந்து திருப்பதிகம்பாடி வணங்கிப் போற்றினுர். இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு அவர் அருளிய திருப்பாடல்,

தலையெ லாம்பறிக் குஞ்சமண் கையருள்
நிலையி னுன்மறைத் தால்மறைக் கொண்ணுமோ
அலையி னுர்பொழில் ஆறை வடதளி
நிலையி னுனடி யேநினைந் துய்ம்மினே.

என்பதாகும். அப்பர் இப்பதிகத்தின் பிற பாடல்களில் சமணர்கள் செய்த வஞ்சனைச் செயல்களை இழித்தும், சோழமன்னர் சமணர்களை அழித்துக் கோயிலை மீண்டும் திருப்பணிசெய்ததைக் குறிப்பிட்டும் பாடியுள்ளார்.

திருஞானசம்பந்தர் சுந்தரர் ஆகியோரும் இத்தலத்திறைவரைப் போற்றியுள்ளனர். அத்திருப்பதிகங்கள் மறைந்தனவாதல்வேண்டும்.

**மங்கையர்க்கரசியார் :**

திருஞானசம்பந்தப்பெருமானை மதுரைக்கு வரவழைத்துச் சமண் இருள் மூடிக்கிடந்த பாண்டிநாட்டில் சைவப்பெருநெறி தழைக்கச் செய்தருளிய பெருமைக்குரியவர் மங்கையர்க்கரசியார். திருஞான சம்பந்தரால் தேவாரத் திருப்பதிகத்துள் பாராட்டப்பெற்ற சிறப்புடையவர். நின்றசீர்நெடுமாறபாண்டியரின் துணைவியார். இவர் தந்தையார் மணிமுடிச் சோழமன்னர். இம்மன்னர் பழையாறையைத் தலைநகராகக்கொண்டு அரசுபுரிந்தவர். மங்கையர்க்கரசியார் திருவவதாரம் செய்தருளியது பழையாறையேயாகும்.

திருப்பனந்தாளில் சாய்ந்திருந்த சிவலிங்கத்தைநிமிர்த்து வழிபட முயன்ற மன்னனும் மணிமுடிச் சோழன் ஆவான். பின் குங்குலியக் கலய நாயனுரின் அன்பிற்கு நேர்நின்ற அப்பெருமானை வழிபட்டு அருள்பெற்ற அம்மன்னனே மங்கையர்க்கரசியாரின் தந்தையாவான்.

## 2. திருவலஞ்சுழி

காவிரியாறு வலமாக சுழித்துச்செல்லும் இடத்தில் அமைந்துள்ளதால் இத்தலம் வலஞ்சுழி எனப் பெயர்பெற்றது.

**இருப்பிடம் :**

கும்பகோணம் தஞ்சாவூர் இருப்புப்பாதையில் சுவாமிமலை புகைவண்டிநிலையத்திலிருந்து தெற்கே 1 கி. மீட்டர் தூரத்தில் இத்தலம் உள்ளது. கும்பகோணத்திலிருந்து தஞ்சை பாவநாசம், சுந்தரப் பெருமாள்கோயில் செல்லும் பேருந்துகளில் செல்வது எளிது. திருக்கோயிலுக்கு அருகில் இறங்கலாம்.

**தலப்பெருமை :**

திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் பாடியருளிய ஐந்து திருப்பதிகங்களைப் பெற்றுள்ளது. இது காவிரித்தென்கரைத் தலங்களில் 25 ஆவது தலமாகும். திருவிடைமருதூர்த் திருக்கோயிலின் பரிவாரத் தலங்களில் விநாயகருக்கு உரிய தலமாகத் திகழ்வது.

**ஏரண்ட முனிவர் :**

ஒரு காலத்தில் காவிரியாறு இந்தத்தலத்தை அடைந்தபொழுது, ஆதிசேடன் வெளிவந்த பாதாளம் அளவுள்ள பள்ளத்தில் இறங்கி விட்டது. அதுகண்ட சோழமன்னன் அரித்துவஜன் மனம் மிகமிகக் கவன்றான். அதுசமயம் பாதாளத்தில் ஒரு மன்னனோ அல்லது ஒரு மகரிஷியோ இறங்கிப் பலியிட்டுக்கொண்டால் பிலம் மூடும் ; காவிரி வெளிப்படும் என்று ஒரு அசரீரிதோன்றிற்று. அரசன் மிக்க கவலையை அடைந்தான். திருக்கொட்டையூரில் ஏரண்டம் எனப்படும் கொட்டைச்செடியினருகில் தவஞ்செய்த காரணத்தால் ஏரண்ட முனிவர் எனப் பெயர்பெற்ற முனிவரை அடைந்தான். இவர் அத்திரி முனிவரின் மைந்தர். ஆத்திரேயர் எனப் பெயர் உடையவர். இம் முனிவரிடம் தன் கவலையை மன்னன் தெரிவித்தான் ஏரண்ட முனிவர் மன்னனைத்தேற்றினார். தானே பிலத்துட்சென்றார். பிலம் 'மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க்கு இல்லென்ப தன்னுயிர் அஞ்சும் வினை' என்ற குறளுக்கு இலக்கியமானார். பிலம் மூடியது. காவிரி வெளிப்பட்டது.

ஏரண்ட முனிவர் தவம் பெருக்கிய இடமாகிய ஏரண்டபுரம் எனப்படும் கொட்டையூரிலும், அம்முனிவர் பிலத்துட் புகுந்து காவிரியை வெளிப்படுத்திய இத்தலத்திலும், திருவலம்புரத்திலும் ஏரண்ட முனிவர் திருவுருவம் இன்றும் உள்ளது. திருநாவுக்கரசு சுவாமிகள் திருவலஞ்சுழியையும், திருக்கொட்டையூரையும் இணைத்துத் திருப்பதிகம் அருளிச்செய்துள்ளார்.

**ஆதிசேடன் :**

ஆதிசேடன் மகாசிவராத்திரி அன்று பாதாள உலகிலிருந்து வெளிவந்து நான்குயாமத்திலும் நான்கு தலங்களுக்குச் சென்று வழிபட்டான். அவை திருவலஞ்சுழி, திருநாகேச்சரம், திருப்பாம்புரம், திருநாகைக்காரோணம் என்ற தலங்களாகும்.

**சக்திவனம் :**

பராசக்தி ஒரு முனிவருக்குப் புதல்வியாகத்தோன்றி, பெருமானை வழிபட்டு அப்பெருமானையே திருமணம்செய்துகொண்டாள். அதனால் சக்திவனம் என இத்தலம் பெயர்பெற்றது.

இந்திரன், திருமால், பிரமன் முதலிய தேவர்களும், ஏரண்ட முனிவர், ஆதிசேடன், அம்பிகை, சோழமன்னர்கள் ஆகியோரும் வழிபட்டு அருள்பெற்ற தலம்.

**கோயிலமைப்பு :**

திருவலஞ்சுழித் திருக்கோயில் கிழக்குநோக்கி அமைந்துள்ளது. இராஜகோபுரம் நன்கு திருப்பணிசெய்யப்பெற்றுப் புதுப்பொலிவுடன் திகழ்கிறது. மூன்று பிராகாரங்கள் உள்ளன. இராஜகோபுர வழியாக உள்ளே நுழைந்ததும் திருக்குளமும், மண்டபக்கோயிலும் உள்ளன. இரண்டாம் கோபுரம் பஞ்சமூர்த்திகளின் சுதைச் சிற்பங்களோடு கட்டைக்கோபுரமாக உள்ளது. இவ்வாயிலைக் கடந்தவுடன் கொடிமரமும், நந்திமண்டபமும், சுவேதவிநாயகர் சந்நிதியும் (வெள்ளைப் பிள்ளையார்) உள்ளன. இத்தலத்தின் சிறப்புமூர்த்தியாக இவ்விநாயகர் போற்றப்படுகிறார்.

விநாயகர் எழுந்தருளியுள்ள மண்டபம் இந்திரனால் நிர்மாணிக்கப்பட்டது. சிற்பச் சித்திர வேலைப்பாடுகள் உடையது. சித்திரத் தூண்களும், கல் குத்துவிளக்குகளும், கல்பணிகளும் கொண்டு விளங்கும் இக்கோயில் தனிச்சிறப்போடு திகழ்கிறது. ஆவுடையார் கோயிலில் உள்ளதுபோன்ற கொடுங்கைகளை உடைய மண்டபத்தில் விநாயகர் விளங்குகிறார்.

வடக்கே அலங்கார மண்டபம் உள்ளது. இதையடுத்துள்ள சுற்றில் நிறைபணி மண்டபம் உள்ளது. தெற்கில் மடைப்பள்ளியும், வடக்கே உற்சவ மண்டபமும் உள்ளன. மூன்றாம் வாயிலைக் கடந்து உள்ளேசென்றால் முதற்பிராகாரம். தென்புறம் பல இலிங்கங்களும் நவசக்தி மூர்த்தங்களும், மேற்கில் தலவிநாயகர், வலஞ்சுழிவிநாயகர், சோமாஸ்கந்தர், சண்முக சுப்பிரமணியர், இலக்குமி முதலிய மூர்த்திகளின் சந்நிதிகளும் உள்ளன. வடக்கில் பலராலும் பூசிக்கப்பட்ட சிவலிங்க பாணங்கள் உள்ளன.

கருவறைப்பிறைகளில் தெற்கே தக்ஷிணாமூர்த்தி, நடராசர், பிக்ஷாடனர் சிலாவிக்கிரகங்களும், மேற்கே இலிங்கோற்பவரும், வடக்கே பிர்மாவும் உள்ளனர். சண்டேசர்கோயில் தனியே உள்ளது. இங்குச் சனிபகவான்சந்நிதி இருக்கிறது. சுவாமிசந்நிதியில் வடபுறம் உற்சவமூர்த்திகளும், நடராஜர் திருவுருவமும் உள்ளன. மகாமண்டபத்தில் ஏரண்டமுனிவர் திருவுருவம் உள்ளது.

மூன்றாவது வெளிப்பிராகாரத்தில் அம்பாள் கோயில் தனியே கிழக்குநோக்கி உள்ளது. சுவாமியின் வலப்பாகத்தில் திருமணக்

கோலமாக அம்மை விளங்குகிருள். அம்பாள்கோயிலில் தென்புறத்தில் அஷ்டபுஜகாளிகோயில் உள்ளது. இத்தலத்தில் தனிச் சிறப்போடு விளங்கிய பைரவர் கோயில் சிதைந்தநிலையில் இராஜகோபுரத்தின் அருகில் உள்ளது, பைரவர் திருவுருவமும் சிதைந்துள்ளது. மிக உக்கிரமாக விளங்கியதால் இம்மூர்த்தியைப் பின்னப்படுத்தியுள்ளனர். இக்கோயில் விக்கிரகங்கள் பல தஞ்சைக் கண்காட்சியில் வைக்கப்பெற்றுள்ளன.

**மூர்த்திகள் :**

இறைவன் திருப்பெயர் அருள்மிகு கபர்த்தீசுரர் ( செஞ்சடை நாதர் ), கற்பகநாதேசுரர், வலஞ்சுழிநாதர் என்பனவாகும். அம்பாள் திருப்பெயர் அருள்மிகு பெரியநாயகி.

**தலவிநாயகர் :**

அருள்மிகு சுவேதவிநாயகர் எனப்படுவார். தமிழில் அருள்மிகு வெள்ளைவாரணர் எனப் பெயர்பெறுவார். தேவேந்திரனுல் கடல் நுரையால் செய்யப்பெற்றுப் பிரதிஷ்டைசெய்யப்பெற்ற மூர்த்தி இவர்.

**தீர்த்தங்கள் :**

காவிரி, அரசலாறு, ஜடாதீர்த்தம் ( இராஜகோபுரத்தினருகில் உள்ளது ) ஆகியனவாகும். **தலமரம்** – வில்வம். அம்பாள் சந்நிதியில் உள்ளது.

**தலத்தின் மறுபெயர்கள் :**

சக்திவனம், திகுணுவர்த்தம், தஷிணுவர்த்தம் என்பன.

**சுவேதவிநாயகர் :**

இத்தலத்தில் கொடிமரவிநாயகரே மிக்க சிறப்போடு பிரதான விநாயகராகப் போற்றப்படுகிருர். திருப்பாற்கடல் கடைந்தபோது தேவர்கள் விநாயகர்வழிபாடு செய்யாது கடல்கடைய முற்பட்டார்கள். நெடுநேரமாகியும் அமுதம் கிடைக்கவில்லை, இந்திரன் விநாயகர் வழிபாடு செய்யாமல் பாற்கடல் கடையத் தொடங்கிய குற்றத்தை உணர்ந்தான். உடனே கடல்நுரையால் ஒரு விநாயகர் திருவுருவத்தைச் செய்து பூசித்தான். மீண்டும் கடல்கடையத் தொடங்கினுன். அமுதம் கிடைத்தது. அமுதமுண்ட இந்திரன் விநாயகரை எடுத்துக் கொண்டு தன்னுலகம்செல்ல முற்பட்டான். இத்தலத்தில் விநாயகரை வைத்துவிட்டு இறைவனைவழிபட்டான். வழிபாடுமுடித்து விநாயகரை எடுத்துக்கொண்டு புறப்பட முயன்ருன். விநாயகரை எடுக்க முடியவில்லை. அதனுல் விநாயகரை இத்தலத்திலேயே விமானம் எடுத்துப்

பிரதிட்டைசெய்து நிறைபணிவிழா நிகழ்த்தித் தேவலோகம்சென்றான். இந்திரன் பூஜை இன்றும் பெருவிழாவில் ஒன்பதாம் திருநாளில் நடத்தப்படுகிறது.

கடல்நுரை மூர்த்தியானதால் பச்சைக்கற்பூரம்மட்டுமே அபிஷேகம் செய்யப்பெறுகிறது. இம்மூர்த்திக்கு வேறு அபிடேகம் கிடையாது. வாணி கமலாம்பாள் சமேதராய் விநாயகர் உற்சவ விக்கிரகங்கள் உள்ளன. ஆவணி சதுர்த்தியில் பெருவிழா நடைபெறுகிறது. இச்சிறப்பால் வெள்ளை விநாயகர் கோயில் என இத்தலம் வழங்கப்படுகிறது.

**பரிவாரத் தலங்கள் :**

திருவிடைமருதூரில் விளங்கும் மகாலிங்கப் பெருமானுக்குப் பரிவாரமூர்த்திகளாக விளங்கும் தெய்வங்கள் எழுந்தருளிய தலங்களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடுவர். திருவலஞ்சுழி-விநாயகர். சுவாமிமலை - முருகன். திருவாப்பாடி-சண்டேசுரர். சூரியனார்கோயில்-சூரியன் முதலிய ஒன்பது கோள்கள். சிதம்பரம் - நடராசப்பெருமான். சீகாழி - பைரவர். திருவாவடுதுறை - திருநந்திதேவர். திருவாரூர் - சோமாஸ்கந்தர். ஆலங்குடி ( இரும்பூளை ) - தக்ஷிணாமூர்த்தி. இப்பரிவார மூர்த்தங்களைக்கொண்டு மகாலிங்கப்பெருமான் திருவிடைமருதூரில் திகழ்கிறார் என்கிறது மருதவன புராணம்.

**திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் :**

திருஞானசம்பந்தர் பல திருத்தலங்களுக்கும் சென்று வழிபட்டுக்கொண்டு திருவலஞ்சுழிக்கு எழுந்தருளினார். வலஞ்சுழி அன்பர்கள் எதிர்கொண்டழைத்தனர். ஞானசம்பந்தர் திருக்கோயிலுக்குச்சென்று பெருமானை வணங்கி மகிழ்ந்து "என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே" என வலஞ்சுழி இறைவரைவழிபடும்பேறு கிடைத்ததை வியந்து பதிகம்பாடி வழிபட்டார். சில நாள் தங்கி நாடோறும்சென்று சென்று கண்டு பல திருப்பதிகங்கள் அருளினார். அப்பர்பெருமானும் நல்லூரில் திருவடிதீக்ஷை செய்விக்கப்பெற்று இத்தலத்தை அடைந்து வலஞ்சுழிப்பெருமானை வாழ்த்திப்பாடி வழிபட்டார்.

**கல்வெட்டுக்கள் :**

சோழமன்னர்களான திரிபுவனசக்ரவர்த்தி, திரிபுவனவீரதேவன், இராஜாதிராஜதேவன், இராஜகேசரிவர்மன், பரகேசரிவர்மன், விக்ரமசோழன், இராசேந்திரதேவன் முதலிய சோழமன்னர்களின் ஆட்சிக் காலங்களில் கோயில் வழிபாட்டுக்கு நிலங்களும் நந்தாவிளக்குகளும் வழங்கப்பட்டுள்ளன. சிவபாதசேகரன் என்ற

பட்டப்பெயருடைய இராஜராஜதேவன் திருவல்லத்தில் தங்கியிருந்த போது தனது பிறந்தநாள் நினைவிற்காக நிலங்களைத் தானம்செய்துள்ளான். திருநாவுக்கரசர், திருவாதவூரர், கண்ணப்பர் முதலிய மூர்த்திகளின் வழிபாட்டுக்காகவும் நிலங்கள் தந்துள்ளான். இராஜராஜனின் மனைவி உலோகமாதேவியார் புதல்விகள் குந்தவைமாதேவடிகள் ஆகியோர்களால் க்ஷேத்திரபாலதேவருக்குஅணிகலன்கள் வழங்கப்பட்டுள்ளன. சுவேதவிநாயகருக்கும் நிலங்கள் வழங்கப்பட்டுள்ளன.



## முஸ்லீம் கட்டிய துர்க்கை ஆலயம்

மங்களூர், டிசம்பர் - 3. இங்கிருந்து 30 கிலோமீட்டரில் பப்பநாடு என்ற ஊரில் ஒரு துர்க்கையம்மன்கோயில் இருக்கிறது. அது சாதாரணதோற்றம் உள்ளதாக இருந்தபோதிலும் அதன் வரலாறு சிறப்புள்ளது.

வெகுகாலத்துக்குமுன் பப்பாபியரி என்ற முஸ்லீம் கடல் வணிகர் கட்டிய துர்க்கைகோயில் இது. அவர் சரக்குகளை ஏற்றிக்கொண்டு கேரளத்திலிருந்து பயணம் துவக்கியபோது பப்பநாடு அருகே கப்பல் தரைதட்டி நின்றுபோனது. எவ்வளவு முயன்றும் மிதக்கவிட முடியவில்லை. அன்றிரவு பியரியின் கனவில் துர்க்கையம்மன் சாட்சிகொடுத்து, அங்கு தனக்கு ஒரு கோயில் கட்டுவதானல் கப்பல் மீண்டும் மிதக்கும் என அருளினுள் என்றும், அவ்வாறு செய்வதாகப் பியரி வாக்குறுதி கொடுத்தார் என்றும் கூறப்படுகிறது மறுநாள் கப்பலை எளிதில் மிதக்கவிட்டு, கடற்பயணத்தைத் தொடர்ந்தார் பியரி. சரக்குகளை வழக்கத்தைவிட ஐந்துமடங்கு அதிக லாபத்தில் விற்றுத் திரும்பினுர். துர்க்கைக்குக் கோயில்கட்டி வைத்தார் என்று கூறப்படுகிறது.

இந்து, முஸ்லீம் இருசாராரும் இக்கோயிலுக்கு வருகிருர்கள். இருவகுப்பினரிடமிருந்தும் பணம்வசூலித்து அண்மையில் கோயிலுக்குத் திருப்பணி நடத்தினுர்கள். ஆலயத் திருப்பணிக் குழுவின் ஆறு துணைத்தலைவர்களில் ஒருவர் திரு. எம். பி. நூர்முகமது என்பவர்.

கோயிலருகே பியரி கட்டிய ஒரு மசூதியும் இருக்கிறது. அவரது பெயர்தான் ஊருக்கும் வைக்கப்பட்டிருக்கிறது.

நன்றி! – தினமணி, 4—12—78.

# இறைவா! உன் ஆலயத்தில்.....

தினமலர் விசேஷ நிருபர்

[தமிழகத்திலேயே மிகுந்த நிலமுள்ள-தங்க மரக்காலால் குத்தகை நெல்லை அளந்து வாங்கிய - விளக்கழகுக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய வேதாரண்யம் அருள்மிகு மறைக்காட்டீசர் திருக்கோயிலின் இன்றைய இருண்ட நிலையைத் தெளிவாக்குகிறது இக்கட்டுரை.]

தமிழகத்தில் உள்ள இந்து ஆலயங்களில் விநோதமான நடைமுறைகளையும் ஆச்சரியமான கதைகளையும் கொண்டது தஞ்சை மாவட்டத்தில் இருக்கும் வேதாரண்யம் ஈஸ்வரர் கோயில்.

தமிழகத்திலேயே அதிக நிலமுள்ள கோயில் இதுதான். ஒரு காலத்தில் இந்தக் கோயிலுக்கு 20 ஆயிரம் ஏக்கருக்கும் அதிகமாக நிலமிருந்ததாம். இப்போது 10 ஆயிரத்து 800 ஏக்கர். இவ்வளவு சொத்துக்கள் உள்ள இந்தக் கோயிலை ஸ்ரீலங்காவைச் சேர்ந்த ஒரு பரம்பரை பண்டார சந்நிதிகள் குடும்பந்தான் ஆதிக்கம் செலுத்தி வருகிறது.

தமிழ்நாட்டுக்குச் சொந்தமான ஒரு கோயில் ஸ்ரீ லங்காவைச் சேர்ந்த வரணி ஆதீன சபையின் நிர்வாகப் பொறுப்பில் இருப்பதையும், அந்த ஆதீன சபையைச் சேர்ந்த ஒருபண்டாரசந்நிதி பரம்பரை டிரஸ்டியாக - கடந்த 12 ஆண்டுகளாக இங்கு வந்து தங்கியிருந்து நிர்வாகத்தைக் கவனித்து வருகிறார் என்பதையும் கேள்விப்படும் போது வியப்பாக இருக்கிறது.

வேதாரண்யம் மறைக்காட்டீசுவரர் கோயிலுக்குத் தமிழ்நாடு அறநிலையத்துறை ஒரு நிர்வாக அதிகாரியை நியமித்திருந்தாலும் ஸ்ரீலங்கா பரம்பரை டிரஸ்டி முறை என்பது கால்களுக்கு விலங்கிட்டது போல் நிர்வாகத்தில் தடங்கலையும், குழப்பத்தையும் ஏற்படுத்தி வருவதாகக் கருதப்படுகிறது. இந்த இரட்டை ஆட்சிமுறை காரணமாகக் கோயில் அபிவிருத்தி வேலைகள் தடைப்பட்டு நிற்பதாகவே தோன்றுகிறது.

இருண்டு கிடக்கும் இந்து ஆலயங்களின் வரிசையில் இடம் பெற்றுவிட்ட வேதாரண்யம்கோயிலுக்குச் சொந்தமான 10 ஆயிரத்து

800 ஏக்கர் நிலத்திலிருந்து ஆண்டுக்கு 2 லட்சம் ரூபாய்கூட வருமானம் கிடைக்கவில்லை என்பதைக் கேட்கும்போது ஆச்சரிய மாக இருக்கிறது.

வேதாரண்யத்தில் இருந்து 50 மைல் தொலைவில் இருக்கின்ற பட்டுக்கோட்டை தாலூகா கொள்ளுக்காடு கிராமத்திலும், 30 மைல் தொலைவில் உள்ள குன்னலூரிலும், 37 மைல் தொலைவில் உள்ள தில்லைவிளாகத்திலும்கூட இந்தக் கோயிலுக்கு நிலம் இருக்கிறது. குன்னலூரில்மட்டும் ஆயிரத்து 559 ஏக்கர் இருபோக சாகுபடி நிலம் இருக்கிறது. இந்நிலங்களுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள ஆண்டுக் குத்தகை ஏக்கருக்கு 3 மூட்டை நெல்தான். அதைக்கூட கொடுக்க மனம் வராத குத்தகைதாரர்களிடம் நிலம் சிக்கியிருக்கிறது. ஏக்கருக்கு நூறு கலத்திற்குமேல் நெல் விளைந்தும் ஆறு கலம்கூட கொடுக்க மறுப்பதற்கு இப்போதைய குத்தகைதாரர் பாதுகாப்புச் சட்டமே காரணமாக இருந்து வருகிறது. இந்த ஒரு கோயிலுக்கு மட்டும் குத்தகை பாக்கி சம்பந்தமாக 250 வழக்குகள் பதிவு செய்யப்பட்டு உள்ளன.

வருடத்திற்கு 11 ஆயிரம் கலம் நெல் வரவேண்டும். ஆனல் 2 ஆயிரம் கலம்தான் இந்த ஆண்டு கிடைத்ததாம். தனிப்பட்ட விவசாயிகள்மட்டும் இப்படி பாக்கிவைக்க வில்லை. காரியாபட்டினம் சாகுபடியாளர் கூட்டுறவுசங்கம், பண்ணினேர்மொழியாள்புரம் சாகு படியாளர்கள் கூட்றவு சங்கம் ஆகிய அமைப்புகள்கூட தங்களிட மிருந்துவரும் சுமார் 270 ஏக்கர் நிலத்திற்குச் சரியாக குத்தகை செலுத்துவது இல்லை. இச் சங்கங்கள் விவசாயிகளிடம் வசூலித்த நெல்லைக்கூட கோயிலுக்குச்செலுத்துவதில்லை என்று கூறப்படுகிறது.

வேதாரண்யம் கோயிலுக்குச் சொந்தமான நிலங்கள் 30-க்கும் மேற்பட்ட கிராமங்களில் சுமார் 800 குத்தகை தாரர்களிடம் இருந்து வருகின்றன. ஒரு லட்சத்து 18 ஆயிரம் கலம் நெல் இந்த விவசாயி களிடமிருந்து கோயிலுக்கு வரவேண்டி யிருக்கிறது. வேதாரண்யம் கோயிலுக்குச் சொந்தமான 10 ஆயிரத்து 800 ஏக்கர் நிலத்திலும் சராசரியாக ஆண்டுக்கு 2 கோடியே 50 லட்ச ரூபாய் மதிப்புள்ள நெல் விளைகிறது. அதில் 2 லட்சம் கூட கோயிலுக்கு வந்து சேருவ தில்லை. கேட்பாரில்லாத அனதை சொத்துப்போல, பல பெரிய பணக்காரர்கள்கூடக் கோயில் சொத்துக்களை அனுபவித்து வருகிருர்கள்.

அதே நேரத்தில் "வேதாரண்யம் விளக்கு அழகு" என்று வர் ணிக்கப்பட்ட இந்தக் கோயில் இப்போது இருண்டுபோய் களையிழந்து

காட்சியளிக்கிறது. இக்கோயில் நிர்வாகத்தின்கீழ் இயங்கிவருகின்ற 27 இதர ஆலயங்களின் நிலையும் பரிதாபமாகத்தான் இருக்கிறது. அவை வெறும் நினைவுச் சின்னங்களாகப் பாழடைந்து கிடக்கின்றன.

வருடத்திற்கு 2 லட்சம் ரூபாய்கூட வருமானம் கிடைக்காத இந்தக் கோயிலின் நிலங்களுக்கு ஆண்டுதோறும் 80 ஆயிரம் ரூபாய் ரேவன்யூ கிஸ்தியாக வரி கட்டியாக வேண்டும். தமிழ்நாடு அரசு சில ஆண்டுகளுக்குமுன்பு விவசாயிகளுக்குக் குத்தகை பாக்கிகளை ரத்து செய்தபோது இந்தக் கோயிலுக்கு வரவேண்டிய 14 லட்சத்து 80 ஆயிரம் ரூபாய் தள்ளுபடி செய்யப்பட்டது. ஆனால் அதே சமயத்தில் கோயில் அரசுக்குச் செலுத்தவேண்டிய ரெவின்யூ கிஸ்தியை உடனடியாகக் கட்டவேண்டுமென்று அப்போதைய தி. மு. க. அரசு கட்டளையிட்டது.

இந்த வேடிக்கையான நிலைமை ஒருவேதனை மிக்க நிகழ்ச்சிக்குக் காரணமாக அமைந்தது. வேதாரண்யம் ஈஸ்வரர்கோயில் நிலத்திற்குச் செலுத்த வேண்டிய கிஸ்தியைச் செலுத்த முடியாமல் போனதால் இந்தக் கோயிலுக்குச் சொந்தமான வெள்ளி ரிஷப வாகனம் ஜப்தி செய்யப்பட்டது. பக்தர்கள் பொதுமக்களின் தீவிர முயற்சி காரணமாகப் பின்னர் வரி செலுத்தப்பட்டு ஜப்தி ரத்து செய்யப்பட்டது. கோயில் வாகனம் ஜப்தி செய்யப்பட்டது வரலாற்றிலேயே அதுதான் முதல் முறை. அந்தப் பெருமையைத் தேடிக்கொண்டது தி. மு. க. அரசுதான்.

முன்பு ஆதீன தர்மகர்த்தாக்களாக இருந்த சுப்பிரமணிய பண்டார சந்நிதி, சுந்தரேச பண்டார சந்நிதி, சிவந்திநாத பண்டார சந்நிதி ஆகியோர் இப்பகுதி மக்களிடம் செல்வாக்குடன் விளங்கி வந்தனர். காலஞ்சென்ற சர்தார் வேதரத்தினம், கருப்பம்புலம் பி. வெங்கடாசலத் தேவர், செங்கோட ஐயங்கார், நெய்விளக்கு முத்தையா கவுண்டர், எஸ். கே. சுப்பையாபிள்ளை, கோடியக்காட்டுப் பண்ணையார்போன்ற செல்வாக்கு மிக்கவர்களின் ஒத்துழைப்பு கோயில்நிர்வாகத்தினருக்குக் கிடைத்துவந்ததால் குத்தகை வசூல் சரியாக நடைபெற்றுவந்தது.

குத்தகைதாரர் பாதுகாப்புச் சட்டம் அமுலில் இருக்கும் இன்றையநிலையில் உள்ளூர் பிரமுகர்களின் ஒத்துழைப்பைப்பெறமுடியாத, நிர்வாகத் திறமையற்ற, வயதான, அதிகம் படிக்காத, நோயாளியான பரம்பரை டிரஸ்டியாக ஸ்ரீலஸ்ரீ கதிர்காம பண்டார சந்நிதி வேதாரண்யத்தில் இருந்துவருவதால் குத்தகையை வசூலிப்பது இயலாதகாரியமாக இருக்கிறது.

அவலக் காட்சிகளைச் சுட்டிக்காட்டுவதற்கு முன்னுல் வேதாரண்யம் என்னும் திருமறைக்காட்டில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு வேதாரண்யேசுவரர் ஆலயத்தின் சில சிறப்புக்களைக் கூறவேண்டும்.

இத்தலம் அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர் ஆகியோரால் பாடல்பெற்றது. சப்தவிடங்கத் தலங்களில் ஒன்ருன இங்குதான் தாயுமானவர் அவதரித்தார். யாழைப்பழித்தமொழியாள் என்னும் அம்பாள் சுவாமி இந்தக்கோயிலின் ஒருசிறப்பு அம்சம். சிவபெருமான் இங்குத் திருமணக்கோலத்தில் எழுந்தருளியிருப்பது அபூர்வக் காட்சியாகும்.

தெய்வீக மணம் கமழவேண்டிய இந்தக் கோயிலுக்குள் இப்போது சாக்கடை மணம்தான் கமழ்கிறது. கோயில் கழிவுநீர் வெளியேறச் சாக்கடைவசதி இல்லாததால் சாக்கடைக் கழிவுநீர் முழுவதும் கோயிலுக்குள் தேங்கி நின்று "மணம்" பரப்பிவருகிறது. மழைக் காலத்தில் தேங்கிநிற்கும் தண்ணீரில் நடந்துபோய்தான் மக்கள் இறைவனைத் தரிசிக்கவேண்டும். சாக்கடைவாய்க்காலை எல்லாம் மூடி, சிலர் அங்கே வீடுகட்டிவிட்டார்கள். பாழடைந்த நிலையிலிருக்கும் கோபுரத்தைப் பார்த்தால் அங்கே கலசம் இல்லை. மொட்டையாக நிற்கிறது.

கிழக்குக் கோபுரவாசலுக்கு எதிரில் உள்ள தேர்வீதியில் வரிசையாக 4 தேர்கள் நிற்கின்றன. சதையற்ற எலும்புக்கூடுபோல் கூரைகள் பிரிந்துபோய், சக்கரங்கள் உடைந்துபோய், சிற்பங்கள் சிதைந்து உருக்குலைந்த நிலையில் மண்ணில் புதையுண்டு கிடக்கும் இந்தத்தேர்கள், கண்ணில் நீரை வரவழைக்கின்றன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய பழைமைமிக்க இந்தத் தேர்களின் கட்டைகளையும், சக்கரங்களையும், கூரைகளையும் மக்கள் தெரியாமல் எடுத்துப்போய் அடுப்பெரிக்கப் பயன்படுத்துகிருர்களாம். பழைமையின் சின்னங்கள் — கலைத்திறனின் சின்னங்கள் எங்கோ தீக்கிரையாகிக் கொண்டிருக்கின்றன.

50 மைல் சுற்றளவில் பல கிராமங்களில் இக்கோயிலுக்கு நிலங்கள் இருப்பதால் குத்தகை வசூல்செய்வதற்காக 32 ஆயிரம் ரூபாய் செலவில் ஒரு ஜீப் வாங்கப்பட்டது. வசூல்நோக்கம் நிறைவேறவில்லை என்ருலும் வேறு பல வேலைகளுக்கு அந்த ஜீப் பயன்பட்டதாம். இரண்டு ஆண்டுகளுக்கு முன்பிருந்து, ஓடுவதற்குதகுதியற்ற நிலையில் அந்த ஜீப் நின்றுவிட்டது அதில் இருந்த எஞ்சின் பாகங்களைக் காணவில்லை என்று கூறுகிருர்கள். தெரு ஓரத்தில் கேட்பாரற்றுக் கிடக்கும் இந்த ஜீப்பை இரவு நேரங்களில் சில பையன்கள் படுத்துத் தூங்கிக்கொள்ள பயன்படுத்திவருகிருர்கள். வெறும் "பாடி" மட்டுமே இருக்கின்ற இந்த ஜீப்பை எந்தக் கணக்கில் எழுதுவது? 72-ம்

ஆண்டு வாங்கிய ஜீப் அதற்குள் இந்த நிலைமைக்குப் போனதற்கு யார்காரணம்? ஆடம்பரமாக விழா நடத்தி தி. மு. க. அமைச்சர் ஒருவர் அடிக்கல் நாட்டிய கோயில் கல்யாண மண்டபத்தின் கதி என்ன? அங்கு இப்போது கல்யாண மண்டபம் இல்லை. பொதுமக்களால் வேறு பல வீடுகள் கட்டப்பட்டுள்ளன.

இந்தக்கோயிலின் தேர் ஓடிச் சுமார் 25 ஆண்டுகள் ஆவதாகக் கூறுகிருர்கள். திருவிழாக்கள் நடப்பதாகவே தெரியவில்லை. பூசை திட்ட செலவுகள் எல்லாம் குறைந்து, பெயரளவுக்குப் பூசை நடைபெற்றுவருகிறது. பக்தர்கள் நிற்பதற்காகக் கோயிலுக்குள் போடப்பட்டுள்ள ஒரு பந்தல் பிரிந்துபோய்கிடக்கிறது. சுமார் 200 ரூபாய் செலவழித்து அந்தப் பந்தலைப் புதுபிக்கக்கூட நிர்வாகிகள் முன் வரவில்லை.

ஒருகாலத்தில் வேதாரண்யம் கோயில்நிலங்களிலிருந்து வருகிற குத்தகைநெல்லை அளப்பதற்காகத் தங்கத்தில்மரக்கால்வைத்திருந்தார் களாம். அதெல்லாம் இப்போது எங்கே என்பது தெரியவில்லை.

சில ஆண்டுகளுக்குமுன்பு வேதாரண்யத்தைச்சேர்ந்த சமூகநல ஊழியரான ஜி. கார்த்திகேயன் என்பவர் ஒரு துண்டுப்பிரசுரத்தை வெளியிட்டார். " கோயில்சொத்துக்கள் திருட்டு, பக்தர்கள் குமுறல்" என்ற தலைப்பில் அச்சிடப்பட்டிருந்த அந்தத் துண்டுப்பிரசுரத்தில் கோயிலுக்குச் சொந்தமான தங்க மரக்கால் எங்கே? ஐம்பொன்னுல் ஆன அஸ்திரதேவர் சிலை வெட்டப்பட்டது ஏன்? கோயில் வண்டிகள் மறைந்த மாயம் என்ன? அகல்விளக்கு ஏற்ற எண்ணெய் இல்லாமல் போனதேன்? என்றெல்லாம் கேள்விகள் எழுப்பப்பட்டிருந்தன. இதனைத்தொடர்ந்து பொதுமக்களின் கிளர்ச்சி உருவானதும் உண்டு என்கிருர்கள்.

வேதாரண்யம் கோயிலின் சீர்கேடுகளைப்பற்றிக் கஸ்தூரிபா காந்தி கன்னியாகுருகுலம் நிர்வாகி அப்பாகுட்டிபிள்ளையிடம் கருத்து கேட்டபோது கோயில் நிலங்களினுலேயே இந்தக்கோயில் அழிந்து வருகிறது. டிரஸ்டிக்கும் நிர்வாக அதிகாரிக்கும் உள்ள அதிகாரம் வரையறுக்கப்படவேண்டும். திருக்கோயிலைச் சரியாக நிர்வகித்தால் நித்தியகாணிக்கைமூலம் வருமானம் பெருகும். இந்தக்கோயில் தனித்தன்மைகளும், பிரச்னைகளும் கொண்டவை. இதற்காகத் தனியாக ஆய்வு நடத்தி அரசு உறுதியான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று கூறினுர்.

இந்து ஆலயங்களின் நிர்வாகமுறைகளைச் சீரமைத்து ஊழலுக்கு இடமில்லாமல் செய்வதோடு குத்தகைதாரர் பாதுகாப்புச் சட்டத்தையும் அரசு ரத்துசெய்யுமானுல் ஆலயங்கள் மீண்டும் ஒளி பெறும் என்று நம்பலாம்.

நன்றி! — தினமலர், 5—12—78.

# அறம்கூறும் அரிய நூல்கள்

**பேராசிரியர் திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ.**

**முன்னுரை**

நம் தமிழ்நூல்கள் பலவும் அறச்செய்திகளை நேர்முகமாகவும் மறைமுகமாகவும் எடுத்துக் கூறுவன. அவற்றில் இலக்கியங்கள் அறச் செய்திகளை மறைமுகமாகவும் நீதி நூல்கள் நேர்முகமாகவும் கூறுவனவாகும். நேர்முகமாகக் கூறும் நீதி நூல்களில் திருக்குறள் பலராலும் அறிந்துகொள்ளப்பட்ட நூலாகும். நான்மணிக்கடிகை போன்ற நூல்கள் பலராலும் அறிந்துகொள்ளப்படாத - ஆனால் அரிய செய்திகளைக் கொண்டனவாக இருப்பதைக் காணலாம். இவ்வரிசையில் **நான்மணிக்கடிகை** என்னும் நூலைப்பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

**அறிமுகம் :**

இந்நூலின்கண் உள்ள பாடல்கள் மொத்தம் 106. இப்பாடல்கள் ஒவ்வொன்றும் நான்கு நான்கு கருத்துக்களைக் கூறுவனவாக அமைந்துள்ளன. ஆதலின் நான்கு மணிகளைப் பதித்துச் செய்யப்பட்ட புது அணிகலன் என்னும் பொருளில் இந்நூலின்பெயர் அமைந்துள்ளது. நான்கு + மணி + கடிகை எனப் பிரிக்கலாம்.

இந்நூலை இயற்றிய ஆசிரியர் விளம்பி நாகனார். இவரின் இயற் பெயர் 'நாகனார்' என்றும், ஊர் விளம்பி என்றும் அறிஞர்கள் கருதுகின்றனர். இவர் பாடிய காப்புச் செய்யுள்கொண்டு இவர் வைணவராக இருக்கவேண்டும் என்று எண்ண இடமுளது.

**உவமைவழிச் செய்திகள் :**

சமுதாயத்தில் வறுமை என்பது தீர்க்க முடியாத நிலையாகி விட்டது. இந்த வறுமை எல்லாருடைய வாழ்விலும் நிலைமைக்கு ஏற்ப வரும்; போகும். நான்மணிக்கடிகை ஆசிரியர் இந்த வறுமையினால் நமக்கு ஒரு பயனுண்டு என்று சொல்லிக்காட்டுகின்றார்.

செல்வம் இருக்கும்பொழுது நம்மைச் சுற்றி வந்தவர்கள் அச் செல்வம் தீர்ந்தபொழுது என்ன செய்கிறார்கள் என்பதைக்கொண்டே அவர்களை நண்பர்களா? இல்லையா? என்று இனம்கண்டுகொள்ளலாம்

எனக் கூறுகின்றார். ஆதலின் உறவினர்களின் பயனைத் தெரிந்து கொள்ள நாம் வறுமையாளனாக மாறினாலும் தவறில்லை என்பதைப் போலக் கூறுகின்றார். இக்கருத்தினை விளக்க வந்தவர் இதற்குப் பொருத்தமாக மூன்று செய்திகளை முன்னே அடுக்கிக் காட்டுகின்றார்.

மாணிக்க மணியின் இயல்பினைக் கழுவி அறிவார்கள்; குதிரையின் இயல்பினை அதன்மேல் சேணம் அமைத்து ஏறி அமர்ந்தபின் அறிவார்கள்; பொன்னின் இயல்பினை உருக்கி அறிவார்கள்; அது போல உறவினர்களால் ஆய பயனைச் செல்வம் இழந்த நிலையில் அறிவார்கள் என்று கூறுகின்றார்.

இக்கருத்தமைந்த பாடல்:

மண்ணி அறிப மணிநலம் பண்ணமைத்து
ஏறிய பின்அறிப மாநலம் மாசறச்
சுட்டுஅறிப பொன்னின் நலம்காண்பார் கெட்டுஅறிப
கேளிரான் ஆய பயன்.

[பா. எண். 5]

மேலும் மற்றொரு பாடலில் கல்வியின் சிறப்பினைக் கூறவரும் பொழுது, அருமையான உவமையினை எடுத்தாளுகின்றார்.

ஒருகுடும்பத்தில் பிறந்தமூத்தோன் கல்லாது இருப்பானேயானால் அவனை மதிக்காது கற்றறிவுள்ள இளையவனையே எல்லோரும் மதிப்பர் என்னும் கருத்தினை விளக்குகின்றார். இந்த இடத்தில் விறகின் தீ பெரிதாக இருந்தாலும் அதனை வணங்காது, திரியின் தீ சிறிதாக இருந்தாலும் அதனையே வணங்குவர் என்னும் உவமையினைக் கையாளுகின்றார். இவ்வுவமையின் பொருளாழம் எண்ணி எண்ணி மகிழ்தற்குரியது.

இக்கருத்தமைந்த பாடல்:

திரியழல் காணில் தொழுப விறகின்
எரியழல் காணின் இகழ்ப — ஒருகுடியில்
கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான்
இளமைபா ராட்டும் உலகு.

[பா. எ. 66]

## ஒரு பொருளின் அடுக்கு:

நான்மணிக்கடிகையின் ஆசிரியர் ஒரு பொருளைக் கூறும்பொழுது அதை நான்கு செய்திகளின் வாயிலாக அடுக்கிக் காட்டுகின்றார். குற்றம் என்பதை விளக்கும்போது எவை எவையெல்லாம் குற்றம் என்று அடுக்கிக் கூறுகின்றார்.

ஓர் உயிரைக் கொல்லுவதற்காகவே அதனை வளர்ப்பதும் குற்ற மாகும்; விற்பதனுல் ஊனைப்பெற்று உண்ணுவதும் குற்றமாகும்; சொல்லும் வகையல்லாத சொற்களைச் சொல்லலும் குற்றமாகும்; எப்படியும் சொல்லுதலும் குற்றமாகும் என்று பாடுகின்றுர்.

இக்கருத்தமைந்த பாடல் :

அலைப்பான் பிறஉயிரை ஆக்கலும் குற்றம்
விலைப்பாலில் கொண்டுஊன் மிசைதலும் குற்றம்
சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்
கொலைப்பாலும் குற்றமே ஆம்.

[ பா. எ. 28 ]

மற்றுமோரிடத்தில் ஆசிரியர், " தம்மூர் என்று ஊரில்லை " என்னும் செய்தியை விளக்க வந்தபொழுது நான்கு பொருளில் அடுக்கிக் கூறுகின்றுர். கல்வி அறிவு உடையவர்க்கும் தமக்கு என்று ஓர் ஊரில்லை; தவநெறி உடையவர்க்கும் தமக்கு என்று ஊர் இல்லை; கீழ்மக்களுக்கும் தமக்கு என்று ஓர் ஊரில்லை; செல்வர்களுக்கும் தமக்கு என்று ஓர் ஊர் இல்லை என்று கூறுகிறுர். இப்பாடலின்கண் கல்வியறிவு உடையவர்க்கும் தவம் உடையவர்க்கும் தமக்கென்று ஓர் ஊரில்லை என்று கூறும் பொருள் வெளிப்படை. செல்வம் உடையவர் எல்லா ஊரையும் தம்மூராகச் செல்வச் சிறப்பினுல் ஆக்கிக் கொள்ளலாம் என்பது அறிந்துகொள்ளக்கூடியது. ஆனுல் கீழ்மக்களுக்கோ தமக்கென்று ஓர் ஊரில்லை என்பது ஆய்ந்து பார்க்கக் கூடியது. கீழ்மக்கள் பிற ஊர்களையெல்லாம் தம்மூராக நினைத்துக் கொள்ள முடியாததுபோலவே தாம் வாழும் ஊரையே மரியாதை இன்மையால் தம்மூராக எண்ணிக்கொள்ள முடியாது என்னும் பொருளில் தமக்கென்று ஓர் ஊரில்லை என்று கூறுவது அறிந்து போற்றற்குரியது.

இக்கருத்தமைந்த பாடல் :

நல்லார்க்கும் தம்மூர்என்று ஊரில்லை நன்னெறிச்
செல்வார்க்கும் தம்மூர்என்று ஊரில்லை — அல்லாக்
கடைகட்கும் தம்மூர்என்று ஊரில்லை தங்கைத்(து)
உடையார்க்கும் எவ்வூரும் ஊர்.

[ பா. எ. 84 ]

**ஒருபொருள் தொடர்ச்சி :**

ஆசிரியர் விளம்பி நாகனுர், கருத்துக்களை விளக்கவரும்பொழுது ஒன்றுக்கொன்று தொடர்புடையதாக நான்குசெய்திகளை ஒருபாடலில்

அமைத்துக் காட்டுகின்றார். உதாரணமாக மழையில்லாமல் மக்கட்கு நலமில்லை என்றும், அம்மழையும் தவசிகள் இல்லாத இடத்தில் பெய்தல் இல்லை என்றும், அத்தவமும் நல்லரசன் இல்லாத இடத்து நிகழ்தல் இல்லை என்றும், அவ்வரசனும் குடிமக்கள் இல்லாதஇடத்தில் இல்லாதவனாவான் என்றும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன வாகச் செய்திகளை விளக்குகின்றார்.

இக்கருத்தமைந்த பாடல் :

மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை மழையும்
தவமிலார் இல்வழி இல்லை தவமும்
அரசன் இலாவழி இல்லை அரசனும்
இல்வாழ்வார் இல்வழி இல்.

[ பா. எ. 49 ]

**சமுதாயச் செய்திகள் :**

சமுதாயத்தில் தினம் தினம் காணும் நிகழ்ச்சிகளாக எத்தனையோ உள்ளன. இந்நூலாசிரியர் சமுதாயத்தின்மீது வெறுப்புக்கொண்டு விரக்தியாகப் பேசுவதுபோல ஒரு பாடல் அமைந்துள்ளது.

ஞாயிறும் திங்களும் என்றும் உள்ளன; நோயும் முயற்சியும் என்றும் உள்ளன; ஈவாரும் ஏற்பாரும் என்றும் உள்ளனர்; பிறப் பாரும் இறப்பாரும் என்றும் உள்ளனர். என்ன உலகு! என்று கூறும் செய்திகள் உணரத்தக்கன.

இக்கருத்தமைந்த பாடல் :

என்றும் உளவாகும் நாளும் இருசுடரும்
என்றும் பிணியும் தொழில்ஒக்கும் — என்றும்
கொடுப்பாரும் கொள்வாரும் அன்னர் பிறப்பாரும்
சாவாரும் என்றும் உளர்.

[பா. எ. 60]

மற்றுமோர் பாடலில் விலங்குகளையும் மக்களையும் ஒப்பிட்டுப் பேசிக் காட்டுகின்றார். புலியானது ஊனை உண்டு இன்புறும்; பசுவானது புல்லை உண்டு இன்புறும்; அதுபோலக் கீழ்மக்கள் சோற்றை உண்டு இன்புறுவர்; மேல்மக்கள் மதிப்புணர்ந்து இன்புறுவர் என்று கூறுகின்றார். இப்பாடலில் புலியின் செயல் கீழோர்க்கும் பசுவின் செயல் மேலோர்க்கும் அமைந்ததாகக் கொள்ளலாம். வெறும் சோற்றை உண்டு வாழும் வாழ்வே வாழ்வு என்று கருதுவது சமுதாயத்தில் புரையோடிய செயலாகும் என்பதனை மிக நாகரிகமாக இப்பாடலில் கூறுகின்றார்.

இக்கருத்தமைந்த பாடல் :

ஊனுண்டு உழுவை நிறம்பெறூஉம் நீர்நிலத்துப்
புல்லினுன் இன்புறூஉம் காலேயம் — நெல்லின்
அரிசியான் இன்புறூஉம் கீழெல்லாம் தத்தம்
வரிசையான் இன்புறூஉம் மேல்.

[பா. எ. 68]

**சமயச்செய்திகள் :**

நம்முடைய சைவசமயத்தில், பிறந்த உடம்பான், முகந்து நின்ற வினையினை அனுபவிக்காமல் போகமுடியாது என்பது முடிந்தமுடிபு. ஆனல் அனுபவிக்கும் நிலையில் வித்தியாசங்கள் இருக்கலாமோஎன்ற கேள்விக்கு விளக்கம் தருவது போல ஒரு பாடல் அமைந்துள்ளது.

குளம் சிறிதானல் நீர்வடிந்துவிடும்; வருவாய் சிறிதானல் மனைவி நிலைகடந்து பேசுவாள்; வலிமை சிறிதானல் பகைவர் பகை மேற்கொள்வர்; முன்னைத்தவம் சிறிதானல் தீவினை மிகுந்து வருத்தும் என்று அப்பாடல் கூறுகின்றது. ஆதலின் நாம் அனுபவிக்கும் தீவினையும்கூடப் பெருகி வருத்தாமலிருக்க முன்னைத் தவம் கைகொடுக்கும் என்னும் பதில் இப்பாடலில் பொதிந்து காணப்படுகிறது.

இக்கருத்தமைந்த பாடல் :

ஏரி சிறிதாயின் நீர்ஊரும் இல்லத்து
வாரி சிறிதாயின் பெண்ணூரும் மேலைத்
தவம்சிறி தாயின் வினையூரும் ஊரும்
உரன் சிறிதாயின் பகை.

[பா. எ. 102]

**முடிவுரை :**

இங்ஙனம் "நான்மணிக்கடிகை" என்னும் நூலில் பல்வேறு வகையான செய்திகள் எளிமையான முறையில் விளக்கப்பட்டுள்ளன. அகவாழ்வும் புறவாழ்வும் பல்லாற்றானும் சிறந்த முறையில் விளங்குவதற்கு இந்நூலைப் போன்ற அறநூல்கள் பெரிதும் பயன்கொடுக்கக் கூடியனவாகும். இத்தகைய நூல்களைக் கற்று மக்கள் நன்னெறி அடைவார்களாக.



# செய்திகள்

## தருமையாதீனத்தில் குருபூஜை விழா

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் இரண்டாவது குரு மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை விழா 17—12—78 ஞாயிற்றுக்கிழமையன்று குருமூர்த்த ஆலயத்தில் சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை மாலை இரு வேளைகளிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தப்பெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கியருளினார்கள். ஆலய வழிபாட்டின்போது பாராயணம்செய்து பயன் பெறத் திருவாசகத்தின் பகுதிகளாகிய "சிவபுராணமும் போற்றித் திருவகவலும்" என்ற நூல் குருபூஜை விழா மலராக வெளியிடப் பெற்றது.

காலை வழிபாட்டிற்குப் பின்னர், சிவஞானபோத விரிவுரைகள் நிகழ்த்தப்பெற்றன. வித்துவான். திரு. மு. ஆறுமுகதேசிகர், தருமையாதீனக் கல்லூரி முதல்வர் திரு. வி. சா. குருசாமிதேசிகர் எம். ஏ., பேராசிரியர்கள் புலவர் திரு. இரா. செல்வக்கணபதி எம். ஏ. புலவர். திரு. மு. சிவச்சந்திரன் எம். ஏ., ஆகியோர் முறையே 'பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என்ற தலைப்புக்களில் விரிவுரையாற்றினர். மாலை தேவார இசையரங்கு நிகழ்ந்தது. அன்பர்கள் பலர் கேட்டும் வழிபட்டும் பயன்பெற்றனர்.

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் இருபத்தாருவது குருமகாசந்நிதானம் அவர்களின் மாத ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் வழிபாடு 19—12—78 செவ்வாய்க்கிழமை காலை திருப்பழையாறைவடதளி அருள்மிகு. சோமேசர் ஆலயத்திலும், மாலையில் திருவலஞ்சுழி அருள்மிகு. கபர்த்தீசுவரர் ஆலயத்திலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டின்போது அவ்வத் தலத் திருப்பதிகங்கள் திருபுவனம் தேவஸ்தானம் திருமுறைப் பணியாளர் திரு. எஸ். தண்டபாணிதேசிகர் அவர்களால் பாராயணம் செய்யப்பெற்றன. தலப்பதிகங்களும் வரலாறும் அடங்கிய நூல்

வெளியிட்டு அன்பர்களுக்கு வழங்கப்பெற்றது. திருப்பழையாறை வடதளி அருள்மிகு. சோமேசர் ஆலயத்தில் திருப்பட்டீச்சரம் தேவஸ்தானம் இறைபணியாளர் திரு. டி. ஞானப்பிரகாசம் பிள்ளை அவர்கள் தலைமையில் திரு. வி. சா. குருசாமி தேசிகர் "அப்பரும் பழையாறை வழிபாடும்" என்ற தலைப்பிலும், சுந்தரப்பெருமாள்கோயில் திரு. சு. சுவாமிநாத தேசிகர் "மங்கையர்க்கரசியார்" என்ற தலைப்பிலும் விரிவுரையாற்றினர். திருவலஞ்சுழி கபர்த்தீசுவரர் ஆலயத்தில் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டச் செயலாளர் திரு. எஸ். சுந்தரேசன் செட்டியார், பி. ஏ., பி. டி., அவர்கள் தலைமையில் "விநாயகர் பெருமை" என்பதுபற்றிப் புலவர். திரு. இரா. செல்வக் கணபதி அவர்களும், திருக்கருகாவூர் திரு. கோ. சிவஞானம் அவர்கள் "ஞானசம்பந்தரும் வலஞ்சுழியும்" என்ற தலைப்பிலும் விரிவுரையாற்றினர். அன்பர்கள் வழிபாட்டில்கலந்துகொண்டும் விரிவுரையைக் கேட்டும் பயன்பெற்றனர்.

தருமையாதீனம்

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் மார்கழி மாதத் தலவழிபாடு

மார்கழி மாதம் ஓர் ஆண்டின் பன்னிருமாதங்களுள் மிகச்சிறந்ததாக மக்களால் கருதப்படுவது. "மாதங்களுக்குள் மார்கழி மாதமாக இருக்கிறேன்" என்று கிருஷ்ணபரமாத்மா பகவத்கீதையில் கூறி இருக்கிறார். இம்மாதத்தை நம் முன்னோர்கள் இறைவழிபாட்டுக்கு உரிய மாதமாகக்கொண்டுள்ளனர். திருக்கோவில்களில் திருப்பள்ளி யெழுச்சி வழிபாடு என்ற வழிபாட்டு முறையை ஏற்படுத்தி இம்மாதம் முழுவதும் மக்கள், வழிபாட்டில் திளைத்திருக்க வழிவகுத்துள்ளனர்.

நமது ஓர் ஆண்டுக் காலம் தேவர்களுக்கு ஒருநாள் என்றும், மார்கழி மாதம் தேவர்கட்கு விடியற்காலம் என்றும், அவர்கள் இறை வழிபாடு செய்யும் விடியற்கால வேளையில் நாமும் இறைவழிபாடு செய்து இறையருள்பெற வேண்டும் என்றும் இம் மார்கழிமாத வழிபாட்டை நம் முன்னோர்கள் ஏற்படுத்தியுள்ளனர்.

நம் நாட்டில் மிகப்பெரும் சமயங்களாகப்போற்றப்பெறுவன சைவ வைணவ சமயங்கள். இவ்விரு சமயத் தலைவர்களால் கோயில் என்று வழங்கப்பெறும் தலங்கள் இரண்டு. ஒன்று தில்லை (சிதம்பரம்); மற்றொன்று ஸ்ரீரங்கம். இவ்விரு தலங்களிலும் இம் மாதத்தில் பெருவிழா நிகழ்வதை அனைவரும் அறிவர். தில்லையில் எழுந்தருளி நடனத் திருக்கோலக் காட்சி வழங்கும் ஸ்ரீ நடராசப்பெருமானுக்கு உகந்த

திருநாள் திருவாதிரைத்திருநாள். ஸ்ரீரங்கத்தில் சயனத்திருக்கோலங் கொண்டு அருட்காட்சி வழங்கும் ஸ்ரீரங்கநாதப்பெருமாளுக்கு உகந்த திருநாள் வைகுண்ட ஏகாதசித் திருநாளாகும். இவ்விரு திருநாட்களும் இம்மார்கழி மாதத்தில் நிகழ்வதன்மூலம் இம்மாதத்தின் இறை வழிபாட்டின் சிறப்பை நாம் நன்கு அறியலாம். இம்மாதம் முழுவதும் தெய்வ வழிபாட்டில் திளைத்திருந்தால் இவ்வாண்டு முழுவதும் நாம் தொடங்கிச்செய்யும் செயல்களெல்லாம் நன்மையாகவே முடியும் என்பது நம் முன்னோர்கண்ட முடிபு. அம்முறையில் நம் நாட்டிலுள்ள திருக்கோயில்களிலெல்லாம் திருப்பள்ளியெழுச்சி வழிபாடு சிறப்பாக நிகழ்த்தப்பெறுகிறது.

தருமையாதீன அருளாட்சிக்குட்பட்ட திருக்கோயில்களிலும் மார்கழிமாத வழிபாடு சிறப்பாக நிகழ்த்தப்பெறுகிறது. தருமையாதீனம் 26-ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப்பெருமானுக்குத் திருப்பள்ளியெழுச்சி வழிபாட்டை விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் நாள்தோறும் சிறப்புற நிகழ்த்தியருள்கின்றார்கள். பின்னர் ஸ்ரீ ஞானபுரீசுவரர், ஸ்ரீ தருமபுரீசுவரர், ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்காம்பிகை திருக்கோயில்களில் வழிபாடு நிகழ்த்தி ஆதீனத் திருக்கோயில்களுக்கும் பிற திருக்கோயில்களுக்கும் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்கு அருட்பிரசாதம்வழங்கி ஆசியருள்கின்றார்கள். ஆங்காங்கும் உள்ள மக்கள்பலருக்கும் இறைவழிபாட்டு முறையை உணர்த்தவும் அவர்களை இறைவழிபாட்டில் ஈடுபடுத்திப் பயன்பெறச் செய்யவும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் பலதலங்களுக்கும் எழுந்தருளி வழிபாடாற்றியருள்கின்றார்கள். மேலும் ஆதீன அருளாட்சிக்குட்பட்ட தலங்களுக்கு எழுந்தருளும்போது ஆதீன உயர் அலுவலர்களையும் உடனழைத்துச்சென்று ஆதீனத் திருக்கோயில்களின் நிர்வாகத்தை மேற்பார்வையிடச்செய்து நெறிப்படுத்தியருள்வதும் குறிப்பிடத்தக்கது.

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் நாள்தோறும் எழுந்தருளி நிகழ்த்தும் இச்சிறப்பு வழிபாட்டின்போது உலக நலங்கருதி சுவாமிக்கும் அம்பாளுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்துவித்தும் பரிவட்டங்கள் அணிவித்தும் சுவாமிக்கு ஸ்ரீ ருத்ர திரிசதி அருச்சனையும், அம்பாளுக்கு லலிதா திரிசதி அருச்சனையும் நிகழ்த்துவித்து வழிபாடாற்றியருளினார்கள்.

உருத்திரத்திரிசதி என்பது வேதம் மூன்றனுள் நடுநாயகமான யசுர் வேதத்தின் ஏழு சாகைகளுள் நடுவில் உள்ள நான்காவது சாகையில் இருக்கும் நமகம் எனப்படும். உருத்திரத்தின் நடுவிலுள்ள

ஐந்தாவது ப்ரச்னத்தில் உள்ளது பஞ்சாக்ஷரம். பஞ்சாக்ஷரத்தின் முன்னும் பின்னுமாக 300 நம என்ற சொல்லை உடைய உருத்திர மந்திரங்களால் செய்யும் அருச்சனை உருத்திரத்திரிசதி என்று பெயர் பெறும். உருத்திரத்தை இடைவிடாமல்கூறிச் சிவபதம் அடைந்தவர் உருத்திரபசுபதி நாயனுர். உயர்ந்த பெருமைவாய்ந்த உருத்திரத்தின் சாரமான உருத்திரத்திரிசதி அருச்சனையை இறைவனுக்குச்செய்தவர் பஞ்சமாபாதகம் செய்தவராயினும் உருத்திரத்தை ஜபிப்பவர் முக்தி யடைகிறுர் என்று யாக்ஞவல்க்யர் என்ற முனிவர் கூறியுள்ளார். உருத்திரத்தின் சாரமான உருத்திரதிரிசதியினுல் இறைவனை அர்ச்சிப் பவன் சகல பாபநீக்கமும் பெற்று முக்தியடைகிருன் என்று உருத்திர பாஷ்யத்தால் அறியப்படுகிறது. ஸ்ரீருத்திரதிரிசதி உருத்திரபசுபதி நாயனுர் வரலாற்றில் சேக்கிழாரால் சிறப்பாகக் கூறப்படுகிறது. ஸ்ரீருத்திரதிரிசதி, பஞ்சாட்சரத்தின் பெருமையை விளக்குவது.

சோழ நாட்டையே சிவாலயமாகக் கொண்டு வழிபடும் பழக்கத் தைப் பண்டுதொட்டே நம்முன்னேர்கள் மேற்கொண்டுள்ளனர். அம்முறையை பின்பற்றியும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் வழிபாடாற்றியருள்கிறுர்கள். மல்லிகார்ச்சுனம், மத்தியார்ச்சுனம், புடார்ச்சுனம் என்ற இம்மூன்று தலங்களும் இறைவன் எழுந்தருளி அருள்வழங்கும் தலங்களுள் சிறப்பாகப் போற்றப்படுகின்றன. மல்லிகார்ச்சுனம் வடநாட்டில் விளங்குகிறது புடார்ச்சுனம் திருநெல் வேலி மாவட்டத்தில் உள்ளது இவ்விருதலங்களுக்கும் இடைப்பட்ட தலமாக விளங்குவது மத்தியார்ச்சுனம் இதைத் தமிழில் திருஇடை மருதூர் எனவழங்குவர். மத்தியம் - இடை, அர்ச்சுனம் - மருதமரம். திருஇடைமருதூர்த் திருக்கோவிலை நடுநாயகமாகக்கொண்டு சோழ நாட்டைச் சிவாலயமாகக் காணலாம்.

திருஇடைமருதூர்த் திருக்கோயில் திருவாவடுதுறை ஆதீனத்தின் அருளாட்சியில் அமைந்துள்ளது. திருவாவடுதுறை, மகாலிங்கப் பெருமானுக்கு நேர்கிழக்கில் நந்தித்தலமாக விளங்கு கின்றது. திருவலஞ்சுழி மகாலிங்கப் பெருமானுக்குத் தென்மேற்கு மூலையில் விநாயகரின் தலமாகவும், சுவாமிமலை மகாலிங்கப் பெருமானுக்கு நேர்மேற்கில் முருகன் சந்நிதியாகவும் விளங்குகின்றன. திருச்சேய்ஞலூர் சண்டீசுவரர் அவதரித்த தலம். சண்டீசுவரர் தொண்டுசெய்து பேறுபெற்ற திருவாப்பாடி திருச்சேய்ஞலூருக்கு அருகில், திருப்பனந்தாளுக்குத் தென்மேற்கில் மண்ணியாற்றங்கரை யில் உள்ளது. மகாலிங்கப்பெருமானுக்கு வடக்கில் சண்டீசுவரர் சந்நிதியாகத் திருவாப்பாடி விளங்குகின்றது. சூரியனுர்கோயில் திருஇடைமருதூருக்கு வடகிழக்கில் நவக்கிரகத் தலமாக விளங்கு கின்றது. 'கோயில்' என்று சிறப்பிக்கப்படும் சிதம்பரம் தரிசிக்கமுக்தி

தரும் நடராசப்பெருமானுக்குரிய தலமாக விளங்குகிறது. தருமை ஆதீனத்தின் அருளாட்சியிலுள்ள சீகாழி, மகாலிங்கப்பெருமானுக்குப் பைரவர் சந்நிதியாக விளங்குகின்றது. பிறக்க முத்திதரும் திருவாரூர் மகாலிங்கப்பெருமானுக்குச் சோமாஸ்கந்தமூர்த்தமாக விளங்குவது. ஆலங்குடி மகாலிங்கப்பெருமானுக்குத் தென்திசையில் தட்சிணாமூர்த்தி சந்நிதியாக அமைகிறது.

இவ்வாறு சோழப்பெருநாடு, பெருங்கோயில் அமைப்பாக விளங்கும் தலங்களையும் ஆதீன அருளாட்சிக்குட்பட்ட தலங்களையும் இம்மார்கழிமாதத் தலவழிபாட்டில் மேற்கொண்டு வழிபட்டு ஆங்காங்குள்ள அன்பர்களையும் இறைவழிபாட்டில் ஈடுபடுத்தி ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் ஆசிவழங்கியருளினார்கள்.

## முசுகுந்தார்ச்சனை

திருத்தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் 4-1-79 அன்று திருவாரூர் ஸ்ரீ தியாகராஜசுவாமி தேவஸ்தானத்திற்கு எழுந்தருளி ஸ்ரீ அல்லியங்கோதை உடனாகிய ஸ்ரீ புற்றிடங்கொண்டநாதரையும் ஸ்ரீ தியாகராஜப்பெருமானையும் ஸ்ரீ சித்தீச்சுரம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியையும் வழிபட்டு ஸ்ரீ தியாகராஜப்பெருமானுக்கு சாதரா சாத்தச்செய்து முசுகுந்த சகஸ்ரநாம அர்ச்சனை செய்வித்து வழிபாடாற்றி அன்பர்களுக்குத் திருவருட்பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள். அன்றே ஆலங்குடி ஸ்ரீ உமையம்மை உடனாகிய ஸ்ரீ காசியாரண்யர் திருக்கோயிலுக்கும் எழுந்தருளி வழிபட்டு, அங்கு அருள் வழங்கும் ஸ்ரீ தட்சிணாமூர்த்தியையும் வழிபட்டருளினார்கள்.

5—1—79 வெள்ளிக்கிழமையன்று தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்குவளை எனவழங்கும் திருக்கோளிலி திருக்கோயிலுக்கு எழுந்தருளி ஸ்ரீ வண்டமரும்பூங்குழலாள் உடனாகிய ஸ்ரீ பிரம்மபுரீஸ்வரரை வழிபட்டு ஸ்ரீ தியாகராஜப்பெருமானுக்கு சாதராசாத்தச் செய்து முசுகுந்தார்ச்சனை செய்வித்து வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதம் வழங்கி ஆசியருளினார்கள். ஆங்காங்கும் திருக்கோயில் கண்காணிப்பாளர்களும் உள்ளூர் அன்பர்களும் பூரணகும்பம் முதலிய கோயில் மரியாதைகளுடன் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை வணங்கி வரவேற்று உடனிருந்து வழிபட்டுப் பிரசாதம் பெற்று மகிழ்ந்தார்கள்.



# எதிர்காலம்


## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.


**காளயுக்திஸு தைமீ 1உ முதல் 30உ முடிய.**

**( 14—1—79 முதல் 12—2—79 முடிய )**

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| கே | இராசி | | கு சந் |
| சூ செ. | | | சனி ரா |
| பு | சு | | |

| | | | |
|---|---|---|---|
| | | கே | ல |
| | நவாம்ஸம் | | |
| சூ செ | | | |
| | ரா கு | சந் பு சு | சனி |

ஸ்ரீ காளயுக்திஸு தைமீ 1உ பானுவாரம் பூச நக்ஷத்திரம் கௌலவகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம்முதல் 20 நாழிகை 58 விநாடிக்கு ரிஷப லக்னத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரியபகவான் லோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டு, தனுர் ராசியிலிருந்து மகரராசி சங்கிரமணமாக தைமாதப் பிரவேசம் செய்தருளுகின்றார். அன்று உத்தராயண புண்ணிய காலமாகும் சங்கிரம வாராதிபதி சூரியன் நீரஸாதிபதியாகிறார். சங்கிரம தேவதை கோரா. அவள் சுத்த ஜலம் ஸ்நானம்செய்து, விசித்திர உடைதரித்து, சந்தனகந்தம் பூசி, மகிழம் பூச்சூடி, சுவர்ண ஆபரணம் பூண்டு, சூர்ப்ப பாத்திரத்தில் மாப் பண்டம் உண்டு, பன்றி வாகனம் ஏறி, இலஜ்ஜை திருஷ்டியுடன் கிழக்குமுகம் பார்த்து, மத்தள வாத்தியம்கொட்ட, பிசாசுகள் புடை சூழ, அக்கினி திக்கில் பிரயாணம் செய்வாள். அதன் பலன் லோகத்தில் சகல பிரஜைகளுக்கும் சௌக்கியம் ஏற்படும். தாமிரம், இரத்தினம், மாணிக்கம், முத்து, சந்தனம் இவை மிகுதி ஏற்படும். லோக நாடுகளில் யுத்த ஆரவாரம் ஏற்படினும், அவை ஆன்றோர் களின் முயற்சியில் நீதி உரைகளின் கட்டுப்பாட்டில் நிற்கும்.

உலகிலுள்ள திருமடங்கள் ஆசாரியபீடங்களில் ஈஸ்வர கடாக்ஷம் பெற்று விளங்குகின்ற சிவஞான குருமகான்கள் லோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டுச் செய்துவருகின்ற பூஜாபலனின் மகத்துவத்தால் லோகம் உய்யும். பிரஜா கோடிகள் சிவாசாரத்துடன் நல்வழியில் உயர் கிரியைகள் செய்து, இலட்சுமிகரமாகத் திகழ்வார்கள். தேசங்களிலெங்கும் தேவாலயங்களில் தெய்வபூசனுதிகள் நியமவிதி பிசகாமல் நடந்துவரும். தீக்ஷை பெற்றுத் திகழ்கின்ற தம்பிரான்கள், சிவனடியார்கள் சிவாசாரநெறியாளர்கள் தேசங்களில் ஆங்காங்கு திருச்சபை தோற்றுவித்து, சிவாசார மேன்மையை விளக்கவுரைகள் மூலம் லோகத்துக்கு இயம்பிவருவார்கள். சகலகோடி மக்களும் நன்மார்க்கம் பற்றி உயர்வாழ்க்கை நடத்துவார்கள்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை $\frac{1}{4}$**

**( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )**

மேஷராசி 9 பாதங்களுக்கும் பண வருமானங்கள் வெகுவாக வந்துகொண்டிருக்கும். சகோதரர்களின் விசுவாசம் ஒத்துழைப்பு பலம் இருந்துவரும். பூமியில் இயந்திர சாதனங்களில் நற்பலன் வந்து சேரும். பெற்றோர் நலம் நன்ருக இருந்துவரும். முயற்சித்த காரியங்கள் வெற்றிகரமாக நிறைவேறும். இராசாங்க அனுகூலம் ஏற்படும். விவகாரங்கள் ஜெயிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். தைமீ 9உ 57 நாழிகை 57 விஞடி முதல் 12உ 9 நாழிகை 1 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**2, ரிஷபம் :- கார்த்திகை $\frac{3}{4}$ - உரோகிணி – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$**

**( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வூ - வே. வோ. )**

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்பாபிவிருத்திக்கு வேண்டிய பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். 18உ க்குமேல் கால்நடை ஜீவனில் ஓர் நற்பலன் தரும். பெற்ருேரின் உடல் நலம் பாதித்து உடன்குணமாகும். வித்தியா வியாபாராதிகளில் 2-ஆவது வாரம் மத்திமபலனுகும். மற்றகாலம் விருத்தி தருவன வாகும். தைமீ 12உ 9 நாழிகை 1 விநாடி முதல் 14உ 16 நாழிகை 24 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய், புதன் சுபமாகும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ - திருவாதிரை – புனர்பூசம் $\frac{3}{4}$**

**( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )**

மிதுன ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்களில் நல்ல நிலைமையாகவே

இருந்துவரும். எல்லாக்காரியங்களிலும் மிடுக்கானபோக்கில் சாதனை களை அளிக்கும். வித்தியாவியாபாராதிகளில்கலைத்துறையில் உழைப்பு மிகுந்து திருப்தியான பலனை ஏற்படுத்தும். வீடு வாகனாதிகளின் சௌகரியங்கள் நன்ருக இருந்துவரும். செந்நெல் விளைச்சல் மிகுந்து வரும். தைமீ 14உ 16 நாழிகை 24 விஞடிமுதல் 16உ 22 நாழிகை 15 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**

**( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )**

கடக ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். தன வருமானம் தானிய சேகரத்தில் நல்ல நிலைமையை ஏற்படுத்தும். எழுத்துமூல்ய காரியங்களில் 2-வது வாரம் மத்திம பலனுகும். மற்றைய காலம் மிகுந்த சிலாக்கிய பலனை ஏற்படுத்தும். வாகன சுகம் திருப்தியளிக்கும். புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மனைவிக்கு நரம்புத்தளர்ச்சி நலிவு வந்து உடன் குணமாகும். 16உ 22 நாழிகை 15 விஞடிமுதல் 18உ 28 நாழிகை 59விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$**

**( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )**

சிம்மராசி 9 பாதங்களும் நற்பலன் தரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்களை ஏற்படுத்திவரும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும். கால்நடைவாகன பிராப்தியை அளிக்கும். சுகானுப வங்கள் மேலாக இருந்துவரும். பெற்ருேர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். புத்திரர்கள் சுகமாக இருந்துவருவார்கள். பொதுநல சேவையில் நற்கியாதி ஏற்படும். தைமீ 18உ 28 நாழிகை 59 விஞடி முதல் 20உ 38 நாழிகை 38 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

**( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )**

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகை நடக்கும். பண வருமானம் பாக்கிய விருத்தியை ஏற்படுத்திக் கொண்டிருக்கும். சகோதரர்கள் பிரபலஸ்திதியில் இருந்துவருவர். வீடு வாகனங்களின் பிராப்தி பால்பிராப்தி திருப்தியளிக்கும். அடிக்கடி வெளிஅலைச்சலாக இருப்பினும் நன்மைகள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். ஞாயிற்றுக் கிழமை சூரியார்ச்சனை செய்ய நலம் தரும். தைமீ 20உ 38 நாழிகை 38 விஞடி முதல் 22உ 53 நாழிகை 18 விஞடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ - சுவாதி - விசாகம் $\frac{3}{4}$**

(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே.)

துலாராசி 9 பாதங்களும் சுமார் பலனாக நடக்கும். குடும்பத்தில் பண வகை லேவாதேவிகளில் நல்லநிலைமையாக இருந்துவரும். சகோதரர் விசுவாசபான்மையில் இருந்துவருவர். பூமியில் இயந்திர சாதனங்களில் விருத்தி பலனாக இருந்துவரும். உடலில் இரத்தாதிக்கமாக இதயவலி வந்து உடன் குணமாகும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். தைமீ 22உ 53 நாழிகை 13 வினாடிமுதல் 25உ 14 நாழிகை 1 விநாடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் - கேட்டை.**

(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிக ராசி 9 பாதங்களும் சுப பலனாக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் வந்து கொண்டிருக்கும். சகோதரருக்குச் சுகமும் நன்மைகளும் ஏற்படும். பூமி இயந்திரங்களில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பழைய வீடு பழுது பார்த்தல் ஆகும். தாரபுத்திரர்களினால் மகிழ்ச்சி நிலவும். குலதெய்வ பூசை போடுதல் உற்றவர்களின் வருகை ஆகிய நற்சம்பவங்கள்ஏற்படும். தைமீ 25உ 14 நாழிகை 1 விநாடி முதல் 27உ 40 நாழிகை 17 விநாடி வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

**9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$**

(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனுர் ராசி 9 பாதங்களுக்கும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பணம் வரவும் செலவும் சரிசமனாக இருந்துவரும். சகோதரர் நலம் சௌகரியம் இருந்துவரும். வீடுவாகனப் பிராப்தியில் சௌகரியம் இருந்துவரும். 6உ முதல் வித்தியாவியாபாரங்களில் எழுத்து மூல விஷயங்களில் நன்மைக்கான அறிகுறி தோன்றும். புத்திரனுக்கு இராஜாங்க நன்மை ஏற்படும். மனைவிக்கு வாயுபிடிப்பு நலிவு வந்து குணமாகும். தைமீ 27உ 40 நாழிகை 17 விநாடி முதல் 30உ 9 நாழிகை 29 விநாடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$**

(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகர ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் ஓரளவு மதிப்புடன் வரும். உடன் சமச்செலவு ஏற்படும். உடல்நலம் உஷ்ணத்தால் பாதித்து உடன் குணமாகும். புத்திரனின்தொழில்துறை முன்னேற்றமாக நடந்துவரும்.

வித்தியா வியாபாராதிகளில் புத்திசாதுரிய லேவாதேவிகளில் மாதப் பின் பகுதி பிரகாச நிலைமை ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். தைமீ 2உ 51 நாழிகை 21 விஞடி முதல் 4உ 18 நாழிகை 57 விஞடி வரையில் சந்திராஷ்டமம். சனி ஞாயிறு சுபமாகும்.

**11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$**

( கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா. )

கும்ப ராசி 9 பாதங்களும் சுமார் பலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் ஓர் வரவு கைக்கு வருமுன் செலவுத் திட்டங்கள் உருவாகும். பூமி இயந்திரங்களில் ஓரளவு வருமானம் வந்துசேரும். அவற்றிக்கு முதலீடு செய்யவும் நேரும். திசா புத்தி வலுவுடை யோருக்கு மிகுந்த நன்மை ஏற்படுவதாகும். பந்து அம்மான்களின் நலனுக்கு அதிக ஈடுபாடும் செலவினங்களும் ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் விருப்பு வெறுப்பு கலந்து காணும். தைமீ 4உ 18 நாழிகை 57 விஞடி முதல் 7உ 41 நாழிகை 30 விஞடி வரையில் சந்திராஷ்டமம். திங்கள் செவ்வாய் சுபமாகும்.

**12. மீனம் :- பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி.**

( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீன ராசி 9 பாதங்களுக்கும் சுப பலன்தரும். குடும்பாபி விருத்தியில் பல விதத்தில் பண வருமானங்கள் வந்துசேரும். மேன் மேலும் சௌகரியங்கள் ஏற்படுத்தும். வித்தியா வியாபாராதிகளில் கலைத்துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். தொழில் லேவாதேவி களில் புதிய ஒப்பந்தம் ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். தைமீ 7உ 41 நாழிகை 30 விஞடி முதல் 9உ 57 நாழிகை 57 விஞடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.



---

## தெரிந்துகொள்ளுங்கள்

( தொகுப்பு )

யானையின் இதயம் ஒருநிமிடத்திற்கு 25 முறை துடிக் கிறது. மனிதனின் இதயம் ஒருநிமிடத்திற்கு 72 முறை துடிக்கிறது. ஆனுல், எலியின் இதயமோ ஒருநிமிடத்திற்கு 700 முறை துடிக்கிறது.

— இரா. செ.

# தைமாதச் சிறப்பு நாட்கள்

1 (14-1-79) ஞாயிறு, மகரரவி 20-58 உத்தராயணபுண்யகாலம். திருவையாறு தீர்த்தம். சங்கராந்தி பண்டிகை. திருக்கடவூரில் ஸ்ரீ காலசங்காரமூர்த்தி அபிஷேகம். சீகாழி ஸ்ரீ உமாமகேஸ்வரருக்கு உச்சிக்காலத்தில் புழுகாப்பு. குத்தாலத்தில் ஸ்ரீ சந்திரசேகரர் காவிரியில் தீர்த்தம் கொடுத்தருளல்.

2 (15-1-79) திங்கள், மாட்டுப்பொங்கல்.

3 (16-1-79) செவ்வாய், வைத்தீஸ்வரன்கோயிலில் உண்டியல் வைத்தல். ஸ்ரீ முத்துக்குமாரசுவாமிக்கும் ஸ்ரீ சண்முகருக்கும் சண்முகார்ச்சனை. இது நான்கு செவ்வாய்க்கிழமைகளிலும் நடக்கும்.

5 (18-1-79) வியாழன், திருவையாறு ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் 132ம் வருஷ ஆராதனை. ஆலவேலி ஸ்ரீ சித்திவிநாயகர் சம்வத்ஸராபிஷேகம். சண்டேசுர நாயனார் குருபூஜை.

6 (19-1-79) வெள்ளி, வேளூரில் ஸ்ரீ கர்ப்பகவிநாயகருக்குத் தைமாத வெள்ளிக்கிழமை உற்சவாரம்பம். ஸ்ரீ தையல்நாயகி அம்பாளுக்குச் சந்தனக் காப்பும் நவசக்தி அருச்சனையும், சீகாழி திருக்கடவூர் முதலிய இடங்களில் விசேஷ அபிஷேக ஆராதனைகளும் நவசக்தி அருச்சனையும் (நான்கு வெள்ளிக்கிழமைகளிலும்) நடைபெறும். தருமை 15 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

7 (20-1-79) சனி, பேரளம் ஸ்ரீ சுயம்புநாதசுவாமி சம்வத்ஸராபிஷேகம்.

8 (21-1 79) ஞாயிறு, காளாஷ்டமி.

9 (22-1-79) திங்கள், ஸ்ரீ தாயுமான சுவாமிகள் குருபூஜை. திருநீலகண்ட நாயனார் குருபூஜை.

11 (24-1-79) புதன், விளநகர் ஸ்ரீ துறைகாட்டும்வள்ளலார் சம்வத்ஸராபிஷேகம்.

13 (26-1-79) வெள்ளி, மகாப்பிரதோஷம், மாதசிவராத்திரி, குடியரசு தினம்.

14 (27-1-79) சனி, சர்வ அமாவாசை.

15 (28-1-79) ஞாயிறு, அர்த்தோதய புண்ணியகாலம். வேளூரில் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமிக்குக் கடைச்செவ்வாய் உற்சவ ஆரம்பம்.

17 (30-1-79) செவ்வாய், அப்பூதியடிகள் நாயனார் குருபூஜை.

19 ( 1-2-79) வியாழன், குத்தாலம் ஸ்ரீ உக்தவேதீசுவர சுவாமி சம்வத்ஸராபிஷேகம். தைப்பூச உத்ஸவ ஆரம்பம்.

20 ( 2-2-79) வெள்ளி, கலிக்கம்ப நாயனார் குருபூஜை.

21 ( 3-2-79) சனி, ரதசப்தமி.

23 ( 5-2-79) திங்கள், கிருத்திகை விரதம், வேளூர்க்கிருத்திகை, தருமையில் ஸ்ரீ சண்முகருக்கு அபிஷேகம்.

24 ( 6-2-79) செவ்வாய், வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமார சுவாமி கடைச் செவ்வாய் தீர்த்தம்.

25 ( 7-2-79) புதன், தருமை ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமி துர்க்காம்பிகை சம்வத்ஸராபிஷேகம். கண்ணப்ப நாயனார் குருபூஜை.

26 ( 8-2-79) வியாழன், அரிவாட்டாய நாயனார் குருபூஜை.

27 ( 9-2-79) வெள்ளி, மகாப்பிரதோஷம், தருமை ஸ்ரீ வனதுர்க்காம்பிகை சம்வத்ஸராபிஷேகம்.

28 (10-2-79) சனி, தைப்பூசம், புஷ்ய உற்சவ தீர்த்தம்.

29 (11-2-79) ஞாயிறு, பௌர்ணமி விரதபூஜை, மாத பூஜையில் தேன் அபிஷேகம்.

உ

சிவமயம்

ஸ்ரீ மௌனகுரு – ஸ்ரீ தாயுமான சுவாமிகள்

# குருபூஜை விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருச்சி மலைக்கோட்டை மௌனமடம் ஸ்ரீ மௌனகுருவிற்கும், அவர்களிடம் அருளுபதேசம்பெற்று அருளனுபூதிப் பாடல்கள் அருளிய ஸ்ரீ தாயுமான சுவாமிக்கும் நிகழும் காளயுக்தி ஆண்டு. தைத்திங்கள் 9 ஆம்நாள் (22—I—79) திங்கட்கிழமையன்று திருச்சி மௌனமடத்தில் குருபூஜை விழா நடைபெறும்.

விழாவைமுன்னிட்டு, திருச்சி மலைக்கோயில் ஸ்ரீமாணிக்க விநாயகருக்கும், ஸ்ரீ உச்சிப்பிள்ளையாருக்கும், ஸ்ரீ மட்டுவார் குழலம்மை உடனுறைய ஸ்ரீதாயுமானசுவாமிக்கும், ஸ்ரீமௌன குரு - ஸ்ரீ தர்யுமானவருக்கும் அன்று காலை 9 மணியளவில் விசேஷ அபிஷேக ஆராதனைகளும், மௌன மடத்தில் பகல் 11 மணியளவில் குருபூஜையும், 12 மணியளவில் மாகேசுவரபூஜையும் நிகழும்.

மாலை 6 மணியளவில் ஸ்ரீதாயுமானசுவாமி திருக்கோயில் நூற்றுக்கால் மண்டபத்தில் முத்தமிழ்க்காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் தாயுமானசுவாமிகள் பாடல்களைப்பற்றிய கருத்தரங்கும் நிகழும்.

அன்பர்கள் வந்து தரிசித்தும் கேட்டும் இன்புறுவார்களாக.



Printed & Published by V. [illegible]